# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



மலருமா 'மாயா' யுகம்?

KALKI • 19.04.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



மேடையில் பௌர்ணமி

சித்திரை

# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

## டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

## கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது

## தமிழ்நாட்டின் முதல் PET-CT



**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : **93814 36899**
**93814 36896**

10% Special
Discount On Sunday
for Master & Executive
Health Check-up

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* கேன்சரை அறிகிறது. * கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. * கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. * சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. * இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. * மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. * ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). * மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. * நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி – 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

சித்திரைச் சிறப்பிதழ்!

நச்னு 4 தொடர்கள்

சிவாஜி த சுப்ரீம் பாஸ் - 30

70 முதல் 7 வரை - 44

தவணைமுறை தற்கொலை - 18

தீராத விளையாட்டு விட்டலன் - 68

மேலும்...
எழுத்து எக்ஸ்பிரஸ்
ப்ளாக் அண்ட் வொய்ட்
கதைகள்...

# கல்கி

19.04.2009

"கூட்டணிக் கட்சிக்காக உங்க தொகுதியை நீங்க 'விட்டு'க் கொடுத்ததுக்கு உண்மையான காரணமென்ன?"

" 'துட்டுக்'கொடுத்ததுனாலதான்!"

- உ.குணசீலபாண்டியன்





"யாருடனும் கூட்டணி இல்லைன்னு சொன்ன தலைவர் எப்படி சம்மதிச்சார்?"

"உறவுக்கு 'பை' கொடுப்போம்னு சொன்னாங்களாம்!"

# ஹா..ஹா..

"தலைவர் ஏன் பொதுக்கூட்டத்தை ரத்து பண்ணிட்டார்?"

"நிலையான ஆட்சி அமைப்போம்னு பேசும்போதே மேடை கவிழ்ந்திடுச்சாம்!!"

- தென்றல் சண்முகசுந்தரம்





"தலைவரே! நீங்க தேர்தல்ல ஜெயிச்சா, நான் மொட்டை அடிச்சுக்கறதா வேண்டியிருக்கேன்!"

"நான் ஜெயிச்ச பிறகு, எல்லோருக்கும் மொட்டை அடிச்சிடுறேன்!"

- கு.அருணாசலம்

"நம்ம தலைவர் தொகுதிப் பங்கீடு நடந்தப்ப சிறுபிள்ளைத்தனமா மன்றாடிப் பார்த்திருக்கார்..."

"எப்படி...?"

"அரை டிக்கட்டாவது குடுங்கன்னுதான்!"

- ஜே.தனலட்சுமி





# கல்கி


பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர்கள் : கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் : info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :

ஒரு வருடம் : ரூ. 500/-

ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :

ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**

Kalki Buildings,

47-NP, Jawaharlal Nehru Road,

Ekkaduthangal, Chennai - 600 032.




# ஹாலெக்ஷன்!

"தலைவர் பேச்சை மக்கள் கூர்ந்து கேட்டு ரசிச்சாங்கன்னு சொன்னா ஏன் நம்ப மாட்டேங்கிறே?"

"கூர்ந்து கேட்டிருந்தா ரசிச்சிருக்க மாட்டாங்களே!"

- வீ.விஷ்ணுகுமார்



"அ.ம.ச. கட்சித் தலைவருக்கு டாக்டர் பட்டம் கொடுத்தோமே... அந்தக் கட்சி துணைத் தலைவர் ஃபோன்ல வெயிட் பண்றார்!"

"நன்றி சொல்றாரா?"

"இல்லை... அவருக்கு 'துணை டாக்டர்' பட்டம் தரணுமாம்!"

- நாகலட்சுமி கருணாநிதி



'வெளிநாட்டில் பிறந்த ஒருவர் பிரதமராக ஆசைப்படும்போது மராத்திய மண்ணின் மைந்தர் பிரதமராக விருப்பப் படுவதில் என்ன தப்பு?'

பவாரின் தேசியவாத காங்கிரஸ் தொண்டர்கள் எழுப்பிவரும் கேள்வி இது.



* சுனில் பன்சோடே



* ஜெய்பால்

மகாராஷ்டிராவில் உள்ள 48 தொகுதிகளில் பாதியையாவது தமது கட்சிக்கு ஒதுக்க வேண்டும் என்று அடம்பிடித்தார் ஷரத்பவார். காங்கிரஸ் பிடி கொடுக்காமல் இருக்கவே சிவசேனாவுடன் நெருங்கியது போல் காட்டிக் கொண்டார். உடனே காங்கிரஸ் வழிக்கு வந்தது.

ஆனால் தம் பிரதமர் ஆசையை ஷரத்பவார் வெளியிட்டது காங்கிரஸுக்குப் பிடிக்கவில்லை. உடனே ஷரத் பவார், ''என் கட்சி குறைந்த பாராளுமன்றத் தொகுதிகளுக்குத்தான் போட்டியிடுகின்றது. இந்தப் பின்னணியில் பார்த்தால் நான் எப்படி பிரதமராக முடியும்?'' என்று சமரசமாக ஒரு கருத்தை உதிர்க்க, அதற்குப் பிறகே மகாராஷ்டிரா மாநில முதல்வர் அஷோக் சவானை தொகுதி உடன்பாடு குறித்துப் பேச அனுப்பியது காங்கிரஸ் மேலிடம்.

ஷரத்பவார் காங்கிரஸை வழிக்குக் கொண்டு வந்தது இருக்கட்டும். பிரதமராகி, இந்தியாவை அவர் வழிநடத்து வாரா? பவார் போட்டியிடும் மேதா தொகுதியைச் சேர்ந்த சிலரிடம் கருத்து கேட்டோம்.

சுனில் பன்சோடே: ''அதெல்லாம் நடக்காத காரியம். பிரதமராவது இருக்கட்டும். இம்முறை அவர் எம்.பி. ஆவதே கஷ்டம். இந்த முறை ஷரத்பவாருக்கு எதிராகக் களம் இறங்கியிருப்பவர் சுபாஷ் தேஷ்முக். இவர் முன்பு தெற்கு ஷோலாபூர் எம்.பி.யாக இருந்தவர். ரொம்ப நல்லவர். 'லோக் மங்கள் ப்ராஜக்ட்' என்பது போன்ற சிறப்பான திட்டங்களை அறிமுகப்படுத்தியவர். பால் வங்கிகளை சுபாஷ் அறிமுகப்படுத்த, அதற்கு நிறைய வரவேற்பு. ஷரத்பவார் ஜெயிப்பது சவாலான விஷயம்.''

கிஷோர் ஷிரால்: ''ஊழல் பேர்வழி. பிரதமராக வேறு ஆனால் கேட்கவே வேண்டாம்!''

உபார்திக் (பா.ஜ.க. ஆதரவாளர்): ''கிராமங்களில் பன்னிரண்டு மணி நேர மின்வெட்டே போதும் ஷரத்பவாரைக் கவிழ்க்க. போதாக் குறைக்கு வேலையில்லாத் திண்டாட்டம் வேறு.''

ரமேஷ் (ஆட்டோ டிரைவர்): ''எங்க ஆளு பிரதமர் ஆனா பெருமைதானே!''

ஜெய்பால் அஷோக் உபாத்யாய்: ''ஆறு மாதங்களுக்கு ஒருமுறை வெளி நாடு சென்று புது ரத்தம் ஏற்றிக்கொண்டு வருபவர் சரத்பவார். அவர் எங்கே நாடாளப் போகிறார்? தப்பித் தவறி அப்படி ஆகிவிட்டால் நம் நாடு குரங்கின் கையில் பிரம்பின் கதி ஆகிவிடும்.''

# பர..பர..

ஷரத்பவாரின் சில திறமைகளைப் பட்டியலிட்டே ஆக வேண்டும். மகாராஷ்டிர மாநிலத்தின் மூலைமுடுக்கெல்லாம் அத்துப்படி. திறமைகளைக் கண்டு பிடிப்பதில் வல்லவர். சுமார் முப்பது வருடங்களுக்கு முன் சப்-இன்ஸ்பெக்டராக விளங்கிய சுஷில்குமார் ஷிண்டேவை

அரசியலுக்குத் திசைதிருப்பினார். அவர் தான் இன்றைய மகாராஷ்டிர முதல்வர். சிவசேனையை விட்டு சகன் புஜ்பால் என்ற தலைவர் விலகியதற்கும் ஷரத் பவார்தான் மறைமுகக் காரணம். இந்த விலகலால் பால் தாக்கரேவுக்குக் கடும் அதிர்ச்சியை அளித்த புஜ்பால்தான் இன்று

**ராஜீவ் காந்தி இறந்தபோது பிரதமர் ஆசை ஷரத்பவாரின் மனத்தில் துளிர்விட்டது.**

மாநிலத்தின் துணை முதல்வர்.

பவார் தமது முப்பத்தெட்டாவது வயதிலேயே முதல்வரானார். காங்கிரஸ் கட்சியை உடைத்துக் கொண்டு, ஜனதா கட்சியுடன் கூட்டணி அமைத்தபடிதான் அவர் இந்தச் சாதனையைச் செய்தார்.

புனேயின் அருகிலுள்ள பாரமதி தொகுதியில் நின்று வென்றவர் பவார். பஞ்சப் பிரதேசமான அது, இன்று தொழில் நகரமாகி இருக்கிறது. சரியான நீர்வள மேலாண்மை காரணமாக மாநிலத்தில் பிற பகுதிகளில் பஞ்சம் வரும்போது கூட இப்பகுதி செழிப்பாக

# பவார்!

இருக்கிறது.

ராஜீவ் காந்தி இறந்தபோது பிரதமர் ஆசை ஷரத்பவாரின் மனத்தில் துளிர் விட்டது. ஆனால் நரசிம்மராவின் தலைமையில் அமைந்த அமைச்சரவையில் பாதுகாப்பு அமைச்சர் பதவிதான் கிடைத்தது.

'என்ரான்' திட்டத்துக்கு இவர் அரசு சம்மதம் அளித்தது கடும் எதிர்ப்பைக் கிளப்பியது.






சமீபத்தில் நடைபெற்ற இந்தியா - ஆஸ்திரேலியா மூன்றாவது ஒருநாள் கிரிக்கெட் போட்டியில், டிக்கெட் விற்பனையில் ஊழல் புரிந்து பன்னிரண்டு கோடி சுருட்டியதாக ஷரத்பவார் உட்பட ஐவர் மீது வழக்கு உள்ளது.

ஒருபுறம் காங்கிரஸும் ஷரத்பவாரும் கைகோக்க, மறுபுறம் பா.ஜ.க., சிவசேனா கூட்டு சேர, நடுவே மாயாவதி கட்சியும் தலையிட்டிருக்கிறது. மகாராஷ்டிர மண்ணின் மைந்தர்களுக்கும், மும்பையில் வசிக்கும் வடஇந்தியர்களுக்கும் நடுவே ஏற்பட்டுள்ள பூசலை தமக்குச் சாதகமாக்கிக் கொள்ள முடியுமா என்று பார்க்கிறது முலாயம் சிங்கின் சமாஜ்வாடி கட்சி. மூன்றாவது அணி மேடைகளில் ஷரத்பவார் காட்சி கொடுப்பது காங்கிரஸையும் மக்களையும் குழப்பி வருகிறது!

மகாராஷ்டிராவிலிருந்து:

**எலெக்ஷன் ஜி**



**'மரியாதை'யை திருப்தியுடன் முடித்துவிட்டு, ரிசல்ட்டுக்காக பரபரப்புடன் இருந்தபோதும் புன்னகை கலந்த உபசரிப்புடன் நம்மை வரவேற்றார் இயக்குநர் விக்கிரமன்.**



# பாஸிடிவ்வா பாருங்க!

## -இயக்குநர் விக்கிரமன் பேட்டி

'சென்னைக் காதல்' தோல்விக்குப் பிறகு உங்களுடைய வழக்கமான குடும்பப் பாணிக்கே வந்துட்டீங்களா?

''விக்கிரமன் படைப்பு என்றாலே இளைஞர்கள், பெண்கள் என அனைத்து தரப்பு ரசிகர்களிடமும் ஒரு எதிர்பார்ப்பு இருக்கிறது. அதைப் பூர்த்தி செய்ய வேண்டிய கடமையை நான் என்றுமே மறப்பதில்லை. பெரிய வெற்றியைக் கொடுத்துவிட்டு ஒரு பிரேக் விட்டால் பெரிதாக ஒன்றும் பேச மாட்டார்கள். ஆனால் தோல்விப் படம் கொடுத்துவிட்டு பிரேக் விட்டால் இவனுக்குப் படமே இல்லை என்பார்கள். இதையெல்லாம் பொய்யாக்க வேண்டிய சூழலில் நான் இப்போது உள்ளேன்.''

'மரியாதை', 'வானத்தைப் போல' படத்தின் இரண்டாம் பாகமா?

''வானத்தைப் போல அண்ணன்- தம்பி பாசத்தைப் பற்றிச் சொல்வது. மரியாதை அப்பா-மகன் உறவின் உன்னதங்களைக் கூறுவது. அதற்காக 'மரியாதை' சூரியவம்சத்தின் இரண்டாம் பாகமா என்று கேட்காதீர்கள்.''

ஒரே பாடலில் பெரிய ஆளாக வருவதாகப் படங்களில் காட்டுகிறீர்களே? இது நடைமுறையில் சாத்தி

யமா?

''கஷ்டப்படும் ஒருவர் எப்போதும் கஷ்டப்பட்டுக் கொண்டேயிருப்பது கிடையாது. இன்று பெரிய பணக்காரர்களில் நிறைய பேர் ஆரம்பக் காலத்தில் எத்தனையோ போராட்டங்களைச் சந்தித்தவர்கள். கடுமையான உழைப்பும், வெற்றி பெறுவதற்கு சந்தர்ப்பமும் அமைந்துவிட்டால் யாராலும் முன்னேறி விட முடியும். ஒருவன் ஆரம்பத்திலிருந்து கடைசி வரைக்கும் கஷ்டப்பட்டுக் கொண்டேயிருக்கிறான் என்று நெகடிவ்வாகப் படம் எடுத்தால், அதைப் பாராட்டி விருது தருகிறீர்கள். ஆனால் உழைத்தால் உயர்வு உண்டு என்று பாஸிடிவ்வாகச் சொல்லும் என்னிடம் 'இது சாத்தியமா?' என்று கேள்வி கேட்கிறீர்கள். எதையும் பாஸிடிவ்வாகப் பாருங்கள்.''

**உங்கள் படங்களின் பாடல்கள், நம்பிக்கையின் வார்த்தைகளாக அமைகின்றனவே... இதற்குப் பாடலாசிரியர்கள்தான் காரணமா?**

''என்னுடைய படங்களின் பாடலாசிரியர்கள் பெரும்பாலும் நான் அறிமுகப்படுத்தியவர்களாகவே இருப்பார்கள். பழநிபாரதி நான் அறிமுகப்படுத்தியவர். என்னிடம் உதவியாளர்களாக இருந்த கலைக்குமார், ரவிசங்கர் போன்றவர்களும் என்னுடைய படங்களுக்குப் பாடல்கள் எழுதியுள்ளார்கள். இவர்களெல்லாம் இளையதலைமுறையினராக இருப்பதால் இவர்களின் கனவுகளையும், லட்சியங்களையும் பாடல் வரிகளாக எழுதுகிறார்கள். யதார்த்தமான இந்த வரிகள் கூட பாடல்களின் வெற்றிக்குக் காரணமாக இருக்கலாம்.''

**உங்கள் பார்வையில் மரியாதை என்பது என்ன?**

''நாம் மற்றவர்களுக்கு என்ன தருகிறோமோ, அதுவே நமக்குக் கிடைக்கக் கூடிய விஷயம். ஒருவரின் பணம், புகழ், பதவி இவற்றையெல்லாம் தாண்டி அவரின் குணாதிசயங்களுக்காகக் கிடைப்பது மரியாதை. என்னுடைய உதவியாளர்களையும், படத்தில் பணியாற்றும் துணை நடிகர்களையும் மிகுந்த கண்ணியத்துடனும், மரியாதையுடனும்தான் நடத்துகிறேன்.''

**இன்றைய படங்கள் சதையையும், அரிவாள் கலாசாரத்தையும் தான் பிரதிபலிக்கின்றன. இது குறித்து...?**

''இன்றைய தமிழ் சினிமாவின் வியாபாரம் பதினெட்டு முதல் இருபத்திரண்டு வயதினரையே நம்பி இருப்பதால், இதுபோன்ற படங்கள் வெளிவருகின்றன. ஆனால் இதையும் தாண்டி நல்ல படங்களும் வந்து கொண்டுதான் இருக்கின்றன. சதையையும், வன்முறையையும் நம்பிப் படம் எடுக்கும் சூழல் எதிர்காலத்தில் கண்டிப்பாக மாறும்.''

**– ராகவ்குமார்**





“கல்வி மட்டுமன்றி இன்னபிற துறைகளின் தகுதியையும் வளர்த்துக் கொண்டு தன்னம்பிக்கையோடு வெற்றியைக் கைப்பற்றும் வாசல்களைத் திறந்து வைப்பது எங்களின் இலக்கு.”

- ஜெயா எஜுகேஷனல் டிரஸ்ட்டின் சேர்மன்
பேராசிரியர் அ.கனகராஜ்

* சேர்மன் அ.கனகராஜ்

திருவள்ளூர் மாவட்டம் திருநின்றவூரிலுள்ள ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் பயிலும் விடியல்களின் வெளிச்சக் கீற்றுக்களை தண்டோரா போடும் டேலண்ட் ஸ்டார்ஸ் ஏரியா இது...

## ஆசை



நீண்ட நாள் ஆசை
புத்த மதத்தைத் தழுவ...
ஆயினும் தடையாய்...
புத்தரின் போதனை...
'ஆசையே துன்பத்துக்குக் காரணம்!'
(நல்லா சமாளிக்கறீங்க...)

- த.மணிகண்டன்,
முதலாமாண்டு பி.எஸ்ஸி.,

## உள்ளே வா

## இருட்டறை



தாயினை இழந்தால் அறிவு இருட்டு
தந்தையை இழந்தால் அன்பு இருட்டு
சகோதரியை இழந்தால் பகிர்தல் இருட்டு
சகோதரனை இழந்தால் வலிமை இருட்டு
தன்னம்பிக்கை இழந்தால் தரணியே இருட்டு
(அறிவியல் படிச்சாலும் அருமையா எழுதிட்டீங்க... அதான் விஞ்ஞானம்ங்கறது...)

- விஜயலக்ஷ்மி,
இரண்டாம் ஆண்டு பி.எஸ்ஸி,

நான் உயிரோட இருக்கிறதே உன் கையில்தான். நீ மனசு வைச்சாதான் முடியும். இப்போ அலட்சியப்படுத்திட்டு பின்னாடி அவஸ்தைப்படுவே... என்ன பார்க்கறே... சீக்கிரம் டாப் - அப் பண்ணுடா கஞ்சப் பயலே... இப்படிக்கு உன் சிம்கார்டு.

- ஜி.ஜெயபிரபா

**காதல்**

சொல்லாத வார்த்தைகளும்
கவிதையாகின
உன் கண்கள் மௌன மொழி
பேசியதால்...

**(கணினி மொழியே கத்துக்கறவங்க... கண்மொழி எல்லாம் சாதாரணம் உங்களுக்கு...)**

- நந்திதா.பி.சி.
இரண்டாம் ஆண்டு கணினி, 'அ' பிரிவு

# இது நம்ம ஏரியா!






* டாக்டர் எம்.எஸ்.தனராஜன்.

"மக்களின் விழிப்புணர்வுக்கான citizen consumer club என்ற அமைப்பு இங்கு செயல்பட்டு வருகிறது. சமீபத்தில் மாவட்ட அளவில் நடந்த நுகர்வோர் தினவிழாவில் பேச்சு, கவிதை, கட்டுரைப் போட்டிகளில் ஜெயா கல்லூரிதான் முதலிடம் பெற்றது. 2008-09க்கான தேசிய அளவிலான கராத்தே போட்டியில் வி.வினோத் என்ற எங்கள் மாணவன் தங்கப் பதக்கத்தையும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் நடந்த பளுதூக்கும் போட்டியில் ஆர்.கார்த்திக் வெள்ளிப் பதக்கத்தையும் வென்றனர். கிருத்திகா ஐந்து proficiency award வாங்கியுள்ளார். பேராசிரியர் பெருமாள் தலைமையில், கல்லூரியின் கவின் கலை குழு மூலம் மிகச் சீரிய முறையில் வெற்றிகளை மாணவர்கள் சேமித்துக்கொண்டே இருக்கின்றனர்.

58 பேர் யுனிவர்சிட்டி ரேங்க்கும், 5 பேர் கோல்டு மெடலும் பெற்று, சென்னைப் பல்கலைக்கழகத்தில் சிறந்த கல்லூரி என்ற பெயரை எங்கள் மாண வர்கள் கைப்பற்றித் தந்துள்ளனர்" என்று தமது மாணவர்களின் பெருமையின் மூலமாகவே கல்லூரியின் சிறப்பை சூரிய அந்தஸ்துக்குத் தூக்கி வைத்து, தாயென சிலாகிக்கிறார் கல்லூரி முதல்வர் டாக்டர் எம்.எஸ்.தனராஜன்.

"ஆறு வயசிலிருந்து வரைய ஆரம்பிச்சேன். சமீபத்தில் எத்திராஜ் கல்லூரியில் நடந்த ஓவியப் போட்டியில் எனக்கு முதல் பரிசு கிடைச்சது. பென்சில் லைன் டிராயிங்னா பத்து நிமிஷத்துல வரைஞ்சு முடிச்சிடுவேன்."

- பிரபுல்குமார்





## காதல்ன்னா என்ன?

புரியாத ஒன்றைப்
புரிந்துகொள்ளப் புறப்பட்டு
புரியாமலேயே புதைந்துபோகும்
புதுமைகளுள் ஒன்றுதான்
(புரிஞ்சா சரி... ஆனா புரிஞ்சதா,
புரியலையான்னு புரியலையே...)

- டி.பானுப்பிரியா,
இரண்டாம் ஆண்டு
பி.எஸ்.சி.

உன்னை வெல்வதற்கு
யாரும் இல்லை
என் அன்பைத் தவிர
என்னைக் கொல்வதற்கு
யாரும் இல்லை
உன் பிரிவைத் தவிர
(கண்ணு கலங்குது...)

- சி.வினோதினி,
இரண்டாம் ஆண்டு,
உயிர்வேதியியல்

அவளின்றி ஓர்
அணுவும் அசையாது!
சமையலறையில்...!
(நீங்களே இப்படிச்
சொன்னா எப்படி?)

- மு.ஹேமமாலினி,
இரண்டாம் ஆண்டு உயிரி
வேதியியல்

ஸ்ரீ சுவாமி நாத சுவாமி சஹாயம்



## இந்தியாவின் சிறப்புமிக்க முன்னணி ஸ்தாபனம்

# Sri Gomathi Sankar Catering Service

**SGS**

# ஸ்ரீ கோமதி சங்கர் கேட்டரிங் சர்வீஸ்

## Master Cook Catering Contractors



சமையல் சக்கரவர்த்தி

மாம்பலம் **G. சங்கர் ஐயர்**

**பாரதம் முழுவதும்**

15/6, Nayakkamar Street, Near Postal Colony, West Mambalam, Chennai - 600 033.

**Ph: 2371 2318 Cell: 98411 13559, 93810 53924, 2483 2334 (R)**

---



# ஸ்ரீ சிவராம அறக்கட்டளை

5, லின்வுட் அவென்யூ, மகாலிங்கபுரம், சென்னை-34. போன் : 28173810 / 3811

## வேதங்கள் பயில மாணவர்கள் சேர்க்கை

ஸ்ரீ சிவராம அறக்கட்டளை 1998 முதல் சிவபீட சிவராம வேதபாடசாலை என்ற பெயரில் திரிபுரசுந்தரிநகர், பிள்ளைப்பாக்கம், ஸ்ரீபெரும்புதூர் - 602 105, நகரில் பாடசாலை நடத்தி வருகிறது. 1998 முதல் நடந்து வரும் எங்கள் பாடசாலையில் வேதம் கற்கும் குழந்தைகளுக்கு ஆங்கிலம், ஸமஸ்க்ருதம், கணிதம் முதலிய பாடங்களும் கற்பிக்கப்படுகின்றன. இதுவரை 15 வித்யார்த்திகள் அத்யயனம் பூர்த்தி செய்து முடித்திருக்கிறார்கள்.

உபநயனம் ஆன 7 வயது முதல் 12 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு ரிக், க்ருஷ்ண யஜுர், சுக்ல யஜுர், ஸாம வேத அத்யயனம் செய்விக்க விரும்பும் பெற்றோர்கள் உடன் அணுகவும். மேலும் தங்கள் குழந்தைகளுக்கு உபநயனம் செய்து பாடசாலையில் சேர்க்க விரும்பும் பெற்றோர்கள், எங்கள் அறக்கட்டளையால் 04.06.2009 (வியாழக்கிழமை) நடைபெறும் சமஷ்டி உபநயனத்தில் உபநயனம் செய்து பாடசாலையில் சேர்க்கலாம். உடன் மேற்கண்ட நிர்வாக அலுவலகத்துக்கு விண்ணப்பிக்கலாம்.

தங்களது பிறந்த நாள், திருமணநாள் போன்ற சுபதினங்களில் வேதவித்யார்த்திகளுக்கு ஒரு நாள் சமாராதனை போஜனம் செய்து வைக்க விரும்புபவர்கள் ரூ.1500 செலுத்தலாம். டிரஸ்ட்க்கு கொடுக்கும் நன்கொடைக்கு 80ஜி பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு.

நேரில் வந்து சந்திக்க விரும்பும் பெற்றோர்கள் மேற்கண்ட விலாசத்தில் காலை 10 மணி முதல் மதியம் 1 மணி வரை வந்து மேல் விவரங்கள் பெறலாம்.

**இடி'** சிறுகதை, இன்றைய உலகின் அவசரபுத்திக்காரர்களால் நிரபராதிகளும் தண்டிக்கப்படுகிறார்கள் என்பதை உணர்த்தியது.

**- 'வானவில்' மூர்த்தி, கடலூர்**

**'அ**ன்றும் இன்றும் என்றும்' பகுதியில் 'அமரர் கல்கி'யின் துணுக்குகளை வெளியிட்டிருப்பது உண்மையிலேயே 'கலகலா'தான்.

**- வெ.லட்சுமிநாராயணன், வடலூர்**

# குளிர்ச்சி தந்த தமன்னா!



## வட்டமேஜை

**'கு**ண்டாயிருப்பவரும் ஏஞ்சல்தான்!' என்று அவர்களுக்கும் 'அழகு டிப்ஸ்' வழங்கி, அவர்களுக்குள் தன்னம்பிக்கையை விதைத்திருப்பது பாராட்டப்பட வேண்டியது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**இ**ந்த வார கல்கியைப் பிரித்தவுடன் முதல் பக்கத்தில் கூலான தமன்னாவின் படத்தைப் போட்டு, வெயிலின் தாக்கத்திலிருந்து எங்களைக் கொஞ்சம் குளிர்ச்சியடைய வைத்து விட்டீர்கள்...

**- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

**க**ம்பனடிப் பொடி சா.கணேசன் குறித்த கட்டுரையைப் படிக்கையில், அன்று அவர் நடத்திய கம்பன் விழாவினை நேரில் பார்க்கும் பாக்கியம் இல்லாவிட்டாலும் வானொலியிலும், பத்திரிகை மூலமாகவும் கேட்டதும், படித்ததும் இன்று நினைவில் நிழலாடியது. சான்றோரைப் போற்றுவதில் கல்கிக்கு நிகர் கல்கிதான்!

**-பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

**வே**லை தேடும் இளைஞர் சமுதாயத்துக்கு ஊக்கம் தரும் விட்டமின் மாத்திரைகளாய், ஒவ்வொரு வாரமும் சிந்திக்கத்தக்க ஆலோசனைகளை, கருத்துக்களை அள்ளித் தெளித்தது மாஃபா பாண்டியராஜன் படைத்த 'ஆயிரத்தில் ஒருவன்' கட்டுரைத் தொடர். ஒவ்வொரு இளைஞருக்கும் 'நாளை நமதே' என்று நம்பிக்கையூட்டும் பவர்ஃபுல் படைப்பாகும்.

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**ஹா**ய் டார்லிங் என அழைத்த பெட்டர் ஹாஃப், 'ஏய் டாங்கி' என அழைக்கும் பிட்டர் ஹாஃப் ஆக மாறும் காரணங்களை அலசி ஆராய்ந்து, குடும்பம் ஒரு கோயிலாய் விளங்க அன்பே அடிப்படை என்பதைப் புரியவைத்தது விஜய் நாகஸ்வாமியின் தொடர்.

**- ஜி.லலிதா, பொள்ளாச்சி**




# கல்கி



2009 ஏப்ரல் 19
விரோதி சித்திரை 6
மலர் : 67
இதழ் : 38


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## அச்சுறுத்தும் இரட்டை அபாயம்!

**நா**டாளுமன்றத் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டுள்ள கட்சிகளுள் ஒன்றுகூட, நம் நாடு தற்போது எதிர்கொள்ளும் முக்கியமான பிரச்னைகளைக் குறித்துப் பேசவில்லை. முதல் பிரச்னை பொருளாதார வளர்ச்சியில் அபாயகரமான பின்னடைவு. இரண்டாவது பிரச்னை, அண்டை நாடான பாகிஸ்தானில் வளர்ந்து வரும் தலிபான் ஆதிக்கம்.

உலகம் முழுவதுமே பொருளாதார நலிவைச் சந்தித்து வருவதால் அது குறித்துப் பேசுவதற்கு ஒன்றுமே இல்லை என நம் அரசியல் கட்சிகள் முடிவு செய்துவிட்டன போலும்! அதனால்தான் பொருளாதாரச் சீர்திருத்தங்கள் பற்றியோ வேலை வாய்ப்பு பெருக்கத்துக்கான திட்டங்கள் குறித்தோ பேசுவதற்குப் பதிலாக, மேலும் பல இலவசங்கள், மானியங்கள், சலுகைகள் பற்றி அறிக்கைகள் வருகின்றன.

கடந்த பிப்ரவரி மாதத்தில் மட்டுமே ஏற்றுமதிகள் கிட்டத்தட்ட 22 சதவிகிதம் குறைந்துள்ளன. ஏற்றுமதி சார்ந்த நிறுவனங்கள் அடைந்து வரும் நஷ்டத்தால் இதுவரை பத்து மில்லியன் நபர்கள் வேலை இழந்துள்ளனர். இவ்வெண்ணிக்கை மேலும் துரிதமாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. நம் நாட்டு மொத்த உற்பத்தியின் வளர்ச்சி விகிதம் ஐந்து சதவிகிதமாகக் குறையும் என்றும், அன்னியச் செலாவணி கையிருப்பு அதல பாதாளத்துக்குச் செல்லும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

இவை யாவுமே, சராசரி இந்தியனின் வாழ்க்கை, சொல்ல முடியாத அளவுக்குக் கடினமாகப் போகிறது என்பதற்கான அறிகுறிகள். ஆனால் இவை பற்றியெல்லாம் ஆலோசிக்க நமது அரசியல்வாதிகளுக்கு ஏது நேரம்? அவர்கள் தங்களுடைய சகிப்புத்தன்மையற்ற பேச்சிலும் நடத்தையிலும் தலிபானுடன் போட்டி போடத் தயாராகிவிட்டார்கள்!

தலிபான், பாகிஸ்தானில் காலூன்றியிருப்பதால் நாம் எதிர்கொள்ளப் போகும் அபாயம் என்னவென்று நம் அரசியல்வாதிகள் சிந்திக்காவிட்டாலும் நாம் விழிப்புற்று எச்சரிக்கை கொள்ள வேண்டும். பாகிஸ்தானில் தலிபான் கை ஓங்கினாலும் இந்தியாவுக்கு ஆபத்து (ஏற்கெனவே பாக். ஆக்கிரமிப்பு காஷ்மீர்ப் பகுதியில் அவர்கள் ஊடுருவி விட்டார்கள்); அந்நாட்டில் தலிபான் ஒடுக்கப்பட்டாலும் நமக்கு ஆபத்து - அங்கிருந்து விரட்டப்படுவோர் அண்டை நாடான இந்தியாவுக்குத்தான் வேகமாக வந்து சேர்வர்.

சகிப்புத்தன்மைக்கே இடங்கொடாத, அடிப்படைவாதமும் பிற்போக்குச் சிந்தனையும் வன்முறையும் காட்டுமிராண்டிச் சட்டங்களும் கொண்ட தலிபான், இந்த நாட்டின் அழகான மதச்சார்பின்மை கவசத்தை நொடியில் தகர்த்துவிடும். இங்கு தழைக்கும் பலமத கலாசாரத்தை நாசமாக்கிவிடும்.

ஒரு பக்கம் பொருளாதாரச் சீர்குலைவு அச்சுறுத்தல்; இன்னொரு பக்கம் இந்தத் தலிபான் அபாயம். இதை உணர்வதற்கு, பெரிய தீர்க்கதரிசனமெல்லாம் தேவையில்லை; சராசரி கவனமும் எச்சரிக்கை உணர்வும் போதும். ஆனால், நம் அரசியல்வாதிகளிடம் அதைக்கூட இனி எதிர்பார்க்க முடியாது போலிருக்கிறது.

ஒரே தீர்வுதான் உள்ளது: இந்தியாவெங்கிலும் உள்ள மூத்த சான்றோர்கள் ஒன்றுகூடி, நாட்டு நலனில் அக்கறை உள்ள ஐம்பது தனி நபர்களை, அரசியல் ஆதாய நோக்கு இன்றி தேர்தலில் நிறுத்தி, அவர்கள் மூலம் நாட்டுக்கான நல்ல திட்டங்களை எடுத்துரைக்கலாம். அந்த நேர்மையாளர்களுள் 25 பேர் வென்றால்கூட அது இந்திய அரசியலில் திருப்புமுனையாக அமையும். ஊழலில் ஊறிப்போன சுயநல அரசியல்வாதிகளுக்கு ஓர் எச்சரிக்கையாகவும் விளங்கும். ●

# தேர்தல் களம்




அரசியல் நாகரிகம்


ஐயோ கொல்றாங்க!
கொல்றாங்க அழகிரியைக் கொன்னுடுவாங்க!


புள்ளை வளர்க்கறத பத்தி உனக்கு இன்னா தெரியும்?!
நீயெல்லாம் ஒரு அம்மாகாரி!


வேணாம்! போகாதே பிரதர்
சொன்னதைக் கேக்காட்டி நான் போறேன்



# கல்கி

அடுத்து வரும்

இரண்டு இதழ்களும் (26.04.09, 03.05.09)

கோவை மாவட்ட ஸ்பெஷல்கள்...

- மேயரோடு வாசகர்கள் சந்திப்பு
- விருதுகள் எதுக்கு? - ராஜேஷ்குமார் காட்டம்
- கோணியம்மன் மகிமை!
- வீட்டுக்கொரு காற்றாலை!
- ஒடந்துறை ஊராட்சி - ஓர் அலசல்!
- காரமடையான் கருணை!
- வெள்ளியங்கிரி வீதியிலே...
- சத்குரு ஜக்கிவாசுதேவோடு ஒரு நாள்
- ஃபாஸ்ட் ஃபுட் யானைகள்!
- நொய்யலுக்கு நூறு ரூபாய்!
- விமானத்தில் பறக்கும் இளநீர்!
- 'பர பர' நரேன்!
- புறக்கணிக்கப்பட்ட கோவையின் புண்பட்ட குரல்கள்!

இன்னும் சுவாரஸ்யத்
தகவல்களுடன்
நாங்க ரெடி...
நீங்க ரெடியா?

**சூரியன் சுட்டெரிக்க வந்துவிட்டான். இந்தக் கோடையைச் சமாளிக்க என்ன செய்ய வேண்டும்? எதையெல்லாம் தவிர்க்க வேண்டும்? சொல்கிறார் டாக்டர் முரளி ஆச்சார்யா.**

● ஒருநாளைக்கு 5 லிட்டர் முதல் 10 லிட்டர் வரை தண்ணீர் அருந்துவதும், மோர், இளநீர், தர்பூஸ் சேர்த்துக் கொள்வதும் நல்லது. வெளியில் விற்கப்படும் கலர் கலரான குளிர் பானங்கள், காரமான உணவு, அதிக அளவு மசாலா, எண்ணெய் சேர்த்த பதார்த்தங்களையெல்லாம் தவிர்த்து விட வேண்டும்.




● வெயில் காலத்தில் வெளியில் சென்று விட்டு வந்த கையோடு ஜில்லெனக் குளிர்ந்த பானங்களை உட்கொள்வது சரியல்ல. தட்பவெப்ப நிலையில் திடீர் மாற்றம் உடம்பில் பலவித ஒவ்வாமையை ஏற்படுத்தும். குறைந்தபட்சம் ஒரு அரை மணி நேரமாவது ஃப்ரிட்ஜிலிருந்து தண்ணீரை வெளியில் வைத்துவிட்டு உட்கொள்வதுதான் சரி.

● கோடையில் சருமப் பராமரிப்புக்கு, கற்றாழை பயன்படுத்தலாம். கற்றாழைச் சாறு உட்கொள்வதால் உடம்பில் சூடு தணியும். கற்றாழை சேர்த்த ஆயின்மெண்ட்கள் தோலைப் பளபளப்பாக வைத்துக் கொள்ள உதவும்.

● வெயில் காலத்தில் வியர்வையைக் கட்டுப்படுத்த பவுடர்களை அதிகம் பயன்படுத்துவது சருமத்துக்கு நல்லதல்ல. சருமத்திலுள்ள ஓட்டைகளை (pores) பவுடர் அடைத்துவிடும். இயற்கைப் பொருட்களை உபயோகப்படுத்தி வியர்வையைக் கட்டுப்படுத்திக் கொள்ளலாம். சந்தனம், ஆலிவ் எண்ணெய் உபயோகப்படுத்துவது நல்லது. காலமைன் சேர்த்துத் தயாரித்த லோஷன்களும் சருமத்துக்கு நல்லது.

● அதிக நேரம் ஏ.ஸி. அறையில் உட்காராமல் இருப்பது, வெறும் வயிற்றோடு வெளியில் செல்லாமல் இருப்பது, அடிக்கடி முகத்தை சோப் உபயோகப்படுத்தாமல் கழுவிக் கொள்வது, பருத்தி ஆடைகளை உடுத்திக் கொள்வது, தினம் இருமுறை குளிப்பது, வாரத்துக்கு மூன்று முறையாவது தலைக்குக் குளிப்பது போன்றவற்றைச் செய்து வந்தாலே போதும். கோடைக்காலமும் குதூகலமாக குளுகுளு காலமாகவே இருக்கும்.

**- நளினி சம்பத்குமார்**



வாழ்வியல் தொடர்







# தலைமுறை தற்கொலை!

**சம்பவம், உரையாடல், புள்ளி விவரங்கள், கவிதைகள், டாக்டர் பதில் என வெவ்வேறு வடிவங்களில் குடிப்பழக்கத்துக்கு எதிராக, எழுத்தில் ஒரு சிகிச்சையாய் இத்தொடர்...**

## 1. அப்பாவை மீட்பேன்

டியூஷன் முடிந்து, ஃபிரண்ட்ஸ்களுக்கு 'குட் நைட்பா', 'வர்றேம்பா', 'போயிட்டு வரேன்டி', 'பை..டா' என்று வழியனுப்புதலை, விடைபெறுதலை வெவ்வேறு வடிவங்களில் வழங்கிவிட்டு, அந்தக் குட்டிச்சந்தில் நடக்கத் துவங்கினாள் சசி. குழந்தையைப் போல புத்தகத்தை நெஞ்சில் அணைத்துக் கொண்டு இப்படியே பத்து நிமிடம் நடந்தால் வீடு போய் விடலாம். அந்தக் குட்டி வாமனச்சந்து முடிந்து, திடீரென நெடுஞ்சாலையாக விஸ்வரூபம் எடுக்கும் ரோட்டில் சசி அடியெடுத்து வைத்ததும் மனம் பாம்பு நுழைந்த வீடு போல பரபரப்பாகி விட்டது.

''ஐயோ அப்பா வீடு வந்திருப்பாரா? அடிபடாம வரணுமே? கடையிலேயே விழுந்து கிடப்பாரோ?'' - புத்தி புலம்பத் துவங்கியது. எல்லா வீடுகளின் வெளிச்சத்தையும் எடுத்துத் தின்று இருட்டாக்கி வரும் அந்த 'டாஸ்மாக்' சாராயக் கடை, அலங்கார வண்ண விளக்குகளால் ஒளிர்ந்து கொண்டிருந்தது. கடையைப் பார்க்கிறபோது அப்பா பற்றிய கேள்விகள் மட்டுமே ஈரவிதைகள் போல முளைத்து விடுகின்றன. இந்தக் கடையைத் தாண்டித்தான் வீடு போக வேண்டும். 'என் அப்பா இங்கும் இருக்கக்கூடும்.' அவளையும் அறியாமல் அனிச்சையாய்த் தேட ஆரம்பித்தன கண்கள்.

வெளியே எங்கும் காணோம். கடையை மாற்றியிருப்பாரோ? குடிச்சுட்டு, பொழுதோட வீட்டுக்குப் போயிருப்பாரோ? சீக்கிரம் போயிருந்தா அம்மா அடிவாங்குவாளோ? இந்த இரண்டு வருஷத்தில் வாழ்க்கை முழுவதையும் இலையுதிர் காலமாக மாற்றி விட்டது இந்த மதுவின் பிடி. சாராயக் கடைக்கு வெளியே இருந்த மதுவுண்ட கண்கள் வண்டுகளாய் மாறி இவளை



**கல்கி இதழின் உதவி ஆசிரியர் அமிர்தம் சூர்யா. நவீன இலக்கியச் சூழலில் நன்கு அறியப்படுபவர். 'உதிரிசயனத்தை நீரில் அலகம் வரை', 'பகுதி நேரக் கடவுளின் நாட்குறிப்பேடு' என்ற கவிதைத் தொகுப்புகளும் 'முக்கோணத்தின் நான்காவது பக்கம்' என்ற கட்டுரைத் தொகுப்பும் வெளிவந்துள்ளன. இவரது சிறுகதைத் தொகுப்பும் வெளிவரவுள்ளது.**

மொய்ப்பது போலத் தோன்றவும், நடையில் வேகத்தைக் கூட்டினாள். கவிதை எழுதத் தெரிந்த சசியை, படிப்பில் நல்ல ரேங்கில் இருந்த சசியை, மெல்ல மெல்லப் பின்னோக்கி இழுத்துக் கொண்டிருந்தது வீட்டின் அமைதியற்ற சூழல்.

பத்தடி நடந்திருப்பாள்... வேட்டி ஒரு புறமும், கைப்பை ஒருபுறமுமாய் கோடு போட்ட கால் சட்டையோடு, செத்துக் கிடந்த எலியைப் போல் கேட்பாரற்றுக் கிடந்தார் அப்பா. குளக்கரையில் காத்திருந்த கொக்கு தனக்கானதைக் கண்டெடுத்துக் கொத்துவதைப் போல, 'அப்பா'வெனக் கூச்சலிட்டு ஓடினாள். அவர் எடுத்திருந்த வாந்தியில் முகத்தின் ஒரு பக்கம் அமிழ்ந்திருந்தது. 'வறுமையின் நிறம் சிவப்பு' படத்தில் கமல்சாக் கடையிலிருந்து எடுத்துக் கழுவும் ஆப்பிளைப் போல வாட்டர் பாக்கெட் வாங்கி அப்பாவின் முகத்தில் தெளித்துக் கழுவி உட்கார வைத்தாள். அவர் வசம் அவரில்லை.

போதையின் உச்சத்துக்கு இன்னும் போகாத ராமசாமி, தனது சைக்கிள் ரிக்ஷாவில் குந்தி பழைய பாடலை முணு முணுத்தபடி இருந்தான். சசி அவனிடம் மன்றாடி, இருவருமாகச் சேர்ந்து அப்பாவை ரிக்ஷாவில் உட்கார வைத்த போது, சாராய நெடியோடு அவள் தாவணியில் குமட்டிக் கொப்பளித்தார்.

**ஒ**ரு மழைக்காலத்தில், சுவர் இடுக்குத் துளைகளிலிருந்து செவ்வெறும்புகள் வீட்டுக்குள் அப்பியிருந்த போது, அவற்றை எரிப்பதற்கு அம்மா மண்ணெண்ணெய் எடுத்து வந்தாள். கோபத்தோடு அதைத் தடுத்த அப்பா, ஓடிப் போய் ஒரு சிட்டிகை சர்க்கரையை எடுத்து வந்து எறும்புகள் ஓரம் தூவினார். ஒரு நிமிடத்துக்குள் இனிப்புத் துகளைத் தூக்கிக் கொண்டு புற்றுக்குள் அவை ஓடி மறைய, சுவரில் எறும்பு வந்த சுவடு கூட இல்லை. எரிக்காமல் எறும்புகளைத் துரத்திய அந்த அப்பாதான், அம்மாவை அடிக்கும் அரக்கனாகிப் போனார். இல்லை மது அரக்கன் அப்பாவை மாற்றி விட்டிருந்தான்.

**எரிக்காமல் எறும்புகளைத் துரத்திய அந்த அப்பாதான் அம்மாவை அடிக்கும் அரக்கனாகிப் போனார்.**

பழைய நினைவும் புதிய யதார்த்தமும் சசியை அழ வைத்து விட்டன. அழக் கூடாது என்ற வைராக்கியம் அவள் வாயைப் பொத்தியது. சைக்கிள் ரிக்ஷா வீட்டை நெருங்கும்போது காற்றைக் காயப்படுத்துவது போல், ஒரு குழந்தை அழும் ஓசை கேட்டது. சட்டென ஜானகிராமன் மாஸ்டர் நினைவுக்கு வந்து போனார். அப்பாவின் குடிப்பழக்கத்தை நிறுத்த முடியும் என்று தோன்றியது. கலங்கிய கண்களோடு கான்க்ரீட் மனத்தோடு தனக்குள் சொல்லிக் கொண்டாள்... ''மதுவால் சாகத் தயாராகிவிட்ட அப்பாவின் தற்கொலை முயற்சியைத் தடுத்தே தீருவேன். என்னென்ன வழிமுறை உண்டோ, அத்தனையையும் ஏவி அப்பாவை மீட்பேன்...''

*(...மீட்க, நீங்களும் பிரார்த்திப்பீர்தானே?)*

**எச்சரிக்கை! தற்கொலையின் முதல் தவணை இந்த டயலாக்:**

**'' 'களவும் கற்றுமற'ன்னு பெரியவங்க சொல்லியிருக்காங்கடா! டேஸ்ட் எப்படின்னுதானே பார்க்கப் போறோம். பீர், அதுவும் மினி. அது அவ்வளவு போதையில்லடா. பார்ட்டிக்குப் போலாம் மச்சி!''**







# டீன் ஏஜ் கனவு!

**சிறகு வேண்டும் - நா. சுப்புலட்சுமி, இருவாட்சி (இலக்கியத் துறைமுகம்), 41, கல்யாணசுந்தரம் தெரு, பெரம்பூர், சென்னை-11. விலை ரூ.55/-**

பெண்களின் உணர்வுகளை, பெண்களின் குரல் வழியே பதிவு செய்யும் பத்து சிறுகதைகளின் தொகுப்பு. மென்மை, வன்மை, கோபம், குறைகள், ஏக்கம், இலட்சியம் என ஒவ்வொரு கதையும் வெளிப்படுத்தும் உணர்வுகள், நம்மைச் சுற்றியுள்ளவர்களில் அடையாளம் காட்டுகின்றன கதாபாத்திரங்களை. பெண்களின் வெளி மிகப் பெரிது. அதன் சில பகுதிகளில் பறந்து திரிய சிறகுகளைத் தருகிறது இத் தொகுப்பு.






**டீன் ஏஜ் - டாக்டர் என்.கங்கா, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-02. விலை ரூ. 55/-**

குழந்தைகளைக் கையாள்வதில் எதிர்கொள்ளும் சிக்கலான பருவம் அவர்களின் டீன் ஏஜ் பருவம்தான். எந்தக் கண்ணோட்டத்தில் அவர்களைப் பார்க்க வேண்டும், அவர்களை எப்படிப் புரிந்துகொள்ள வேண்டும், எவ்வாறு ஆதரவாக நடந்து கொள்ள வேண்டும் என விவரிக்கும் நூல். டீன் ஏஜ் பருவத்தினர் தங்களை எவ்வாறு நெறிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது மட்டுமல்லாது, அவர்களை எப்படி அணுக வேண்டும் என, பெரியவர்களுக்கும் சொல்லும் நூல்.

**ஸ்ரீ விஜயீந்திர விஜயம் - முதல் பாகம், அம்மன் சத்தியநாதன், அருள்மிகு அம்மன் பதிப்பகம், 16/116, டி.பி. கோயில் தெரு, 'திருமலா ஃப்ளாட்ஸ்', திருவல்லிக்கேணி, சென்னை-05. விலை ரூ. 140.00**

ராகவேந்திரரின் பரமகுருவான ஸ்ரீ விஜயீந்திரர் குறித்த நூல். ஆயகலைகள் அனைத்திலும் சிறந்து விளங்கியவர் என்று குறிப்பிடப்படும் விஜயீந்திரரின் இளமைப் பருவம், கலைகளில் வென்றது, வாதங்களில் வென்றது போன்ற பல செய்திகள் இந்நூலில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ விஜயேந்திரரின் விஜயத்தைக் கதை போன்ற நிகழ்ச்சிகளால் பின்னித் தருகிறது நூல்.

**- நேயமுகில்**



பதற்கு இதுவே காரணம்.

நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பது மட்டுமே ஆயுர்வேதத்தின் வேலையன்று. உடல்நலம் உள்ளவர்களும் தங்களைச் சரிவர பராமரிக்க ஆயுர்வேதம் வழிகாட்டுகிறது.

## www.acupuncture.com

உலகம் முழுவதிலும் இப்போது எல்லோரையும் ஆட்டிப்படைக்கும் பூதமென்றால், அது மன அழுத்தம்தான்.

# உடல் ஒன்று..

## www.ayurvedacures.com

அதர்வண வேதத்தின் உபவேதமாகக் கருதப்படும் ஆயுர்வேதத்தின் அடிப்படை நிலம், நீர், காற்று, நெருப்பு மற்றும் ஆகாயம் என்கிற பஞ்சபூதங்கள்தான்.

மனித உடலும் ஒரு குட்டிப் பிரபஞ்சம்தான். பஞ்சபூதங்களின் சேர்க்கை சமநிலையில் இருக்க வேண்டும். அளவு கூடினாலும் பிரச்னை. குறைந்தாலும் பிரச்னை.

இந்தப் பூதங்களின் சமநிலை குறைவதே தோஷம் எனப்படுகிறது. தோஷங்கள் மூன்றுவகை. வாதம், பித்தம், கபம்.

ஆகாயமும் காற்றும் அளவு கூடினால் வாதம். இது நரம்புகளை, ரத்த ஓட்டத்தைப் பாதிக்கும். நெருப்பும் நீரும் அளவு கூடினால் பித்தம். இது மனிதனின் ஜீரண மண்டலத்தில் சிக்கல் ஏற்படுத்தி, வளர்சிதை மாற்றத்தைப் பாதிக்கும். நீரும் நிலமும் அளவு கூடினால் கபம். இது மனித உடலின் ஒவ்வொரு பாகத்தையும் பாதிக்கக் கூடியது.

ஒவ்வொரு மனிதனிலும் இம்மூன்று தோஷங்களும் வெவ்வேறு விகிதத்தில் இருக்கும். இருவருக்கு ஒரே நோயென்றாலும் இருவேறாக மருந்து கொடுப்

மன அழுத்தத்தைத் தவிர்க்க, தடுக்க என்னதான் வழி?

கலர் கலராய் மாத்திரைகளை விழுங்கி, தண்ணீர் குடிப்பதால் நடக்கப் போவது ஒன்றுமே இல்லை.

மனக்கவலையைத் தீர்க்க எளியவழி அக்குபஞ்சர் மருத்துவம்தான் என்கிறார்கள் சீன மருத்துவ நிபுணர்கள்.

உடலின் பலவித சுகவீனங்களை அக்குபஞ்சர் நிவர்த்தி செய்வதைப் போலவே, மன அழுத்தத்துக்கு சிகிச்சையளிப்பதும் மிக எளிதானது என்பது இவர்களின் கருத்து.

சீனாவின் பாரம்பர்ய மருத்துவமுறையான அக்குபஞ்சர், மன அழுத்தத்துக்கான சிகிச்சைக்கு வருபவர்களிடம் ஒரே ஒரு கண்டிஷன் மட்டும்தான் போடுகிறது.

சிகிச்சை பலனளித்து, தான் கண்டிப்பாக குணமடையலாம் என்ற நம்பிக்கை வைக்க வேண்டும் என்பதுதான் அது.

பிறகு எல்லாவற்றையும் மருத்துவர்களே பார்த்துக்கொள்வார்கள். ஊசிகளின் வழியாக உடலில் தூண்டப்படும் நேர்மறை விளைவுகள், மனத்தையும் ஒருமுகப் படுத்தி, எதிர்மறை எண்ணங்களை விரட்டி

யடிக்குமாம்.

அமெரிக்காவில் இப்போது அக்கு பஞ்சருக்கு நல்ல வரவேற்பாம். வேறென்ன? மன அழுத்தம் அதிகரிப்பதுதான் காரணம்.

**www.unani.com**

**யு**னானி மருத்துவமுறையைத் தோற்றுவித்தவர் ஹகீம் இபின் சினா. ஹிப்போகிரேட்டஸ் காலத்திலிருந்து வழக்கிலிருந்து வரும் மருத்துவமுறைகள் அனைத்திலுமுள்ள முக்கியமான விஷயங்களை

# தோஷம் மூன்று... பூதம் ஐந்து!



ஒருங்கிணைத்து உருவாக்கப்பட்டதுதான் யுனானி.

உலகிலேயே யுனானி மருத்துவத்துக்கென்று அதிகளவில் மருத்துவமனைகள், ஆராய்ச்சி நிலையங்கள், கல்வி நிறுவனங்கள் இருப்பது இந்தியாவில்தான்.

கடந்த பத்தாண்டுகளில் பொருளாதார வளர்ச்சியடைந்த நாடுகளில் அலோபதி எனப்படும் ஆங்கில மருத்துவமுறைக்கு மாற்றாக, இதர முறைகள் விரும்பப்படுகின்றன. இதில் முதன்மை வகிப்பது யுனானியே.

**www.healthmantra.com**

**உ**லகில் விதவிதமான மருத்துவ முறைகள் இருந்தாலும், அத்தனைக்கும் ஆரம்பம் நம்ம ஊரு சித்த மருத்துவம்தான். சித்தம் என்றால் முழுமையானது என்று பொருள்.

ஆயுர்வேதத்தின் பஞ்சபூத தத்துவம், அக்குபஞ்சரின் உணர்வுப் புள்ளிகள், ரெய்கி மருத்துவத்தின் சக்தி இருப்பிடங்கள் என சூரியனின் கீழுள்ள யாவும் சித்தாவில் அடக்கம்.

இம்முறையில் மூலிகைகளோடு சில உலோகங்களும் மருந்தாகப் பயன்படுத்தப்படுகின்றன. செயற்கை ரசாயனங்களுக்கு நோ என்ட்ரி. பக்கவிளைவு என்ற பேச்சுக்கும் இடமில்லை.

நீரிழிவுநோயால் அவதிப்படுபவர்களுக்கு சித்தாவே சிறந்தது. கணையத்தை மீண்டும் இயல்பான நிலையில் செயல்படுத்தி, இன்சுலின் உற்பத்தியைக் கட்டுக்குள் கொண்டு வருகிறது.

முக்கியமான மற்றொரு விஷயம். நோய் உடலைவிட்டு நீங்கியபிறகு, மருந்துகளை மறந்துவிடலாம். ஏனெனில் நீங்கிய நோய் மீண்டும் வந்து ஒட்டிக் கொண்டு உறவாட வாய்ப்பே இல்லை.

**- ஸாந்த்**

**அ**றுபதடி உயர கட் அவுட்டுகள். மதுரை மண்ணுக்கே உரித்தான பிரம்மாண்ட சுவரொட்டிகள், ஃப்ளெக்ஸ் போர்டுகள், மாநகர் எங்கிலுமாக அலங்கார வளைவுகள், பத்தாயிரம் வாலா பட்டாசுகள், அதிர்வேட்டுகள் - இவை ஏதுமின்றி மதுரைக்கு வந்து சென்றிருக்கிறார், உத்தரப்பிரதேச மாநில முதல்வரும் பகுஜன் சமாஜ் கட்சியின் தலைவருமான மாயாவதி. பொதுக்கூட்ட மேடையருகே இரண்டே இரண்டு அலங்கார வளைவுகள் தவிர, தற்கால அரசியல் ஆடம்பரம் ஏதுமில்லை. 'சபாஷ் மாயாவதி!' என மனசுக்குள் மகுடம் சூட்டுகின்றனர் அரசியல் நடுநிலையாளர்கள்.

''மதுரை ஒண்ணும் குலுங்கலியேன்னு கேக்கலாம். தமிழ்நாட்டுல பல ஊர்லேருந்தும் வந்திருக்காங்க. பணம் காசைச் செலவு பண்ணி ஆளுங்களைக் கூட்டியாந்திருந்தா... மதுரை இந்நேரம் குலுங்கியிருக்கும். எங்க நோக்கம் அது இல்ல!'' என்கிறார் பகுஜன் சமாஜ் கட்சியின் தொண்டரான ஆறுமுகம்.




''தனியார் நிறுவனங்கள்ல கூட வேலை வாய்ப்புகளில் இடஒதுக்கீடு செயல்படுவது, இந்தியாவிலேயே உ.பி. மாநிலத்தில் மட்டும்தான். 2009 ஜனவரி 15க்குப் பின்னர் பிறக்கும் ஒவ்வொரு பெண் குழந்தையின் பெயரிலும், அரசே நிரந்தர வைப்பு நிதி டெபாசிட் செய்கிறது. பதினெட்டு வயதான பின்னர், அந்தப் பெண்ணுக்கு ஒரு லட்ச ரூபாய் கிடைக்க இருக்கிறது. இந்தத் திட்டத்துக்கு 'மகாமாயா ஏழைப் பெண்கள் ஆசீர்வாதத் திட்டம்' எனப் பெயர். பகுஜன் சமாஜ் கட்சி, வருகிற பாராளுமன்றத் தேர்தலில் அனைத்து மாநிலங்களிலும் தனித்துப் போட்டியிடுகிறது. மாயாவதி பிரதமராகும் பட்சத்தில் உ.பி.யைப் போலவே தமிழ்நாட்டிலும் 'மாயா'யுகம் மலரும்!'' என்கிறார் பகுஜன் சமாஜ் கட்சியின் மாநில மகளிரணிச் செயலாளர் பிரேமலதா தங்கம் சிகாமணி.

**"இந்தியாவின் அனைத்து மாநிலங்களும், முன்மாதிரி மாநிலங்களாகத் திகழ வேண்டும் என்பதே பகுஜன் சமாஜ் கட்சியின் நோக்கம்"**

தமிழ்நாட்டில் இதுவரை இருபத்து நான்கு வேட்பாளர்கள், பகுஜன் சமாஜ் கட்சி சார்பாக அறிவிக்கப்பட்டுள்ளனர். அவர்களில் மூன்று பேர், முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள். பிராமணரான முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரி சப்தரிஷி, மயிலாடுதுறையில் போட்டியிடுகிறார். ''பகுஜன் சமாஜ் கட்சி, அனைத்து சமூகத்தினருக்குமான அனைத்து சாதியினருக்குமான வெகுஜன மக்கள் கட்சி!'' எனக் குறிப்பிடுகிறார் சமீபத்தில் வந்து சேர்ந்திருக்கும் பேராசிரியர் நிரன்.



* ஜி.கே. முரளிதரன்



* ஆம்ஸ்ட்ராங்

தயார் செய்யப்பட்ட இந்தி உரையினை, கட்சித் தலைவி மாயாவதி மேடையில் முழங்கினார். அது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. ''சிறு வணிகர்கள் பாதிக்கப்படுவார்கள் என்பதற்காக, ரிலையன்ஸ் போன்ற பெரு வணிக நிலையங்களுக்கு உ.பி. மாநிலத்தில் தடை விதிக்கப்பட்டுள்ளது. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பிற்படுத்தப்பட்டோருக்கு மட்டுமல்லாது, உயர்சாதி ஏழைகளுக்கும் உரிய இட ஒதுக்கீடு உத்தரப்பிரதேச மாநிலத்தில் மட்டுமே செயல்படுத்தப்பட்டு முன்மாதிரி மாநிலமாகத் திகழ்கிறது. இந்தியாவின் அனைத்து மாநிலங்களும், முன்மாதிரி மாநிலங்களாகத் திகழ வேண்டும் என்பதே பகுஜன் சமாஜ் கட்சியின் நோக்கம்!'' எனக் குறிப்பிட்டார் மாயாவதி.

# மலருமா 'மாயா' யுகம்?

''மாயாவதியின் பிரசாரம் தமிழகத்தில் எடுபடாது. இங்கே தலித் வாக்கு வங்கி ஆதரவு, காங்கிரஸ், தி.மு.க., அ.தி.மு.க. மற்றும் தலித் இயக்கங்கள் என்று பிரிந்து, பரவலாகியுள்ளது. காங்கிரஸ் மற்றும் பி.ஜே.பி.க்கு மாற்று, பகுஜன் சமாஜ் கட்சி எனப் பேசி வருவது மாயாவதியின் அரசியல் அறியாமை. 'மாயா' யுகம் தமிழ்நாட்டில் மலர வாய்ப்பே இல்லை!'' எனச் சொல்கிறார் காங்கிரஸ் கட்சியின் மாநிலப் பேச்சாளர் ஜி.கே. முரளிதரன்.

''ஏழைகள், சிறு - குறு வணிகர்கள், சிறு - குறு விவசாயிகள் நலன் சார்ந்து செயல் படுவதே பகுஜன் சமாஜ். இதுவே 'மாயா'யுகம். தமிழகத்திலும் 'மாயா'யுகம் மலரும்!'' என நம்பிக்கை தெரிவிக்கிறார் பகுஜன் சமாஜ் கட்சியின் மாநில அமைப்பாளர் ஆம்ஸ்ட்ராங்.

செய்தியும், சித்திரங்களும்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# இது விசிட்டிங்

குறுகிய காலத்தில் புகழ், விருது, அறிவு ஜீவிகளின் கவன ஈர்ப்பு எனக் குறைந்த முதலீட்டில் நிறைந்த லாபம் தரும் யுக்தியாக, மாற்று சினிமாவின் ஒரு கலைவடிவமாகக் குறும்படங்கள் இன்று திகழ்கின்றன.

அதனாலேயே கோலிவுட் டைரக்டர்கள் இப்போது குறும்படத்தை நோக்கிப் பார்வையைத் திருப்பியுள்ளனர். இரண்டாயிரத்திலிருந்து இருபதாயிரம் ரூபாய் வரையிலான செலவில் குறும்படம் தயாராகி வந்துகொண்டிருக்கையில், முப்பது நிமிடப் படத்துக்கு மெகா பட்ஜெட்டாக, ஒன்றேகால் லட்சம் வரை செலவு செய்து வியாபாரச் சந்தைக்கான அஸ்திவாரத்தை இப்போது அமைத்து விட்டனர். இம்மாதிரியான வேக வளர்ச்சியான சூழலில் வெளிவந்துள்ளது மணி மேகலை நாகலிங்கத்தின் '...த்தூ' என்ற குறும்படம்.



* குறும்படத்தில் ஒரு காட்சி...

பஸ் நிறுத்தத்தில் குழந்தையைத் தூக்கிக் கொண்டு பிச்சையெடுக்கிறாள் ஒரு பெண். அப்பெண் ஒரு சில ஆண்களிடம் மட்டுமே கையேந்துவதும், தன்னிடம் பிச்சை கேட்காமல் போவதும் ஆச்சரியம் தருகிறது கதாநாயகனுக்கு. வலியச் சென்று பணம் கொடுத்தாலும் வாங்க மறுக்கிறாள். பிச்சை கொடுப்பவர்களின் பட்டியலில் சில நண்பர்களும் சொந்த அண்ணனும் கூட உள்ளனர். இந்தப் புதிருக்கான பதிலைத் தேடி அவளிடம் விசாரிக்கையில், ''தன்னுடன் உறவு கொண்ட ஆண்களிடம் மட்டும் கையேந்துவது பிச்சையல்ல... பாவ நித்துப்படி'' என்கிறாள். சூழலின் வேசித்தனம் உணர்ந்த அவன் அவளை மீட்டு மணந்து எல்லோர் முகத்திலும் '...த்தூ'வென அரூபமாய்த் துப்புகிறான் தன் எதிர்ப்பு எச்சிலை.

கவிஞர் அமிர்தம் சூர்யாவின் சிறுகதை ஒன்றுக்குக் காட்சி ரூபம் கொடுத்து இயக்கியுள்ளார், குறும்பட இயக்குநர் மணி மேகலை நாகலிங்கம். இவரின் 'ஹைக்கூ தரிசனம்' என்ற குறும்படத்தையடுத்து இது இரண்டாவது தயாரிப்பு.

ஆத்மதிருப்தியாக, தன் இருப்பினை

# கார்டு இல்லை!

உறுதி செய்வதற்காக, சமூக சேவையாகக் குறும்படம் தயாரிக்கும் இயக்குநரைச் சந்தித்து இரண்டு கேள்விகள் எழுப்பினோம்.



* பி.சி.அன்பழகன்

*இது சினிமாவுக்கான முயற்சியா? இதன் நோக்கமென்ன?*

''குறும்படம் பலருக்கு சினிமாவுக்கான விசிட்டிங் கார்டாக இருந்துள்ளது. எனக்கு இது விசிட்டிங் கார்டு அல்ல. முதலில் என் படைப்பு எனது நிழலாகவும், என்னை வழி நடத்தும் வேதமாகவும் இருக்க வேண்டும். பிறருக்கும் அது வழிகாட்டும் என்பது நம்பிக்கை.''

***இந்தக் குறும்படத்துக்கான விமர்சனச் சூழல் எப்படியுள்ளது?***

''முறைகேடான பெண் உருவாவதற்குக் காரணமாயிருக்கும் ஆண்களின், அம்மாதிரியான பெண்ணோடு உறவுகொள்கிற ஆண்களின் முகத்தில் '...த்தூ' வெனத் துப்புகிற இக்குறும்படத்துக்கு இயக்கங்களின் பாராட்டு கிடைக்கிறது. சில இலக்கியவாதிகளிடம் விமர்சனமற்ற மௌனம் நிலவுகிறது. அதற்கு நவீன கலாசார மாற்றத்தில் முறைகேடான உறவு என்பது ஒரு பொருட்டான விஷயமல்ல என்ற எண்ணமும், ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு வழுக்கலில் சறுக்கியிருந்தால் அதனால் எழும் குற்றமனப்பான்மையும் காரணங்களாக இருக்கும்'' என்கிறார் இயக்குநர் மணிமேகலை நாகலிங்கம்.



* மணிமேகலை நாகலிங்கம்

இந்தக் குறும்பட வெளியிட்டு விழாவில் பேசிய விளம்பரப் பட இயக்குநரும் எழுத்தாளருமான உஷா சுப்ரமணியன் ''தனி மனித ஒழுக்கத்தை விட சமுதாய ஒழுக்கம்தான் அவசியம்'' என்றார். காமராசு படத்தை இயக்கிய இயக்குநர் பி.சி.அன்பழகன் அதைக் காட்டமாய் மறுத்து, ''ஒவ்வொரு தனி மனிதனாலும்தான் சமூகம் கட்டமைக்கப் பட்டுள்ளது. சமுதாய ஒழுக்கம் சிறக்க, தனிமனித ஒழுக்கம் அவசியம்'' என்று பட்டிமன்றப் பாணியில் எதிர்த்தாக்குதல் நிகழ்த்தினார்.

இந்தக் குறும்பட இயக்குநரின் சுதந்திரமும் தைரியமும் பாராட்டுக்குரியவை. ''வாழ்வுக்கும் படைப்புக்கும் இடைவெளியில்லாத தன்மை ஒவ்வொரு படைப்பாளிக்கும் அவசியம்'' என்றார்.

குறும்படத்துக்கான இலக்கணங்களைக் கவனத்தில் கொள்ளாமல், ஓபனிங் சாங்கோடு, இன்ன பிற இலக்கணங்களையும் மீறி இருக்கிறது இக்குறும்படம். ஒரு டி.வி. தொடரைப் பார்ப்பதைப்போல், ப்ளாக் அண்ட் ஒயிட் சித்தாந்தத்தைக் காட்சிப்படுத்தியுள்ளது. ''இதனால் சகலருக்கும் அறிவிப்பது யாதெனில்...'' என்கிற வானம்பாடி கவிஞர்களின் ஸ்டைலில் தீர்வு என்ற பெயரில் புத்தி சொல்வது கொஞ்சம் அலுப்பாயிருந்தாலும், அதனுள் ஒளிரும் சத்தியத்தை யாரும் சந்தேகிக்க முடியாது.

- ஆகாஷ்

# அம்மா

பெருமூச்சு விட்டபடி அந்த நவீன மயமாக்கப்பட்ட சர்வதேச விமான நிலையத்தில் அமர்ந்திருந்தேன். விமான நிலையம் நேர்த்தியாக மின்விளக்குகளால் பளிச்சிட்டது.

ஒரு குட்டிப் பெண் அங்குமிங்கும் ஓடுவதுமாய், பின் தன் தாயின் மடியில் வந்து முகம் புதைத்துக் கொள்வதுமாய் இருந்தாள். வேலைக்காகவோ, மேற்படிப்புக்காகவோ செல்லும் ஓர் இளைஞனை வழியனுப்ப ஒரு குடும்பமே வந்திருந்தது. இதுபோல் ஏராள உணர்வுகளின் சந்திப்புகளும், பிரிவுகளும்.

ஆனால், எதிலும் என் மனம் ஈடுபடவில்லை. என் தாயின் முகமே மனத்தில் நிழலாடியது. சமீபத்தில்தான் என் தாய் மரணமடைந்திருந்தார். இறுதிச் சடங்கை முடித்துவிட்டு, பணியாற்றும் தேசத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். என் மனம் எதிலும் லயிக்க மறுத்தது. என்னில் ஒரு பகுதியை இழந்தது போல் ஓர் உணர்வு.

என் தாயின் நினைவுகள் அலை அலையாய்... மனம் சோர்ந்திருந்தது. உடலும்தான். சாப்பிட்டு ஒரு நாள் ஆகியிருந்தது.

'நீ கைக்குழந்தையாக இருந்தபோது, எனக்குப் பிடித்த நல்ல உணவுகளை ஒதுக்கிவிட்டு, உனக்கு குணம் தரும் சாப்பாடுதான் சாப்பிடுவேன்' என்று எத்தனையோ முறை அம்மா சொல்லியிருக்கிறார்.

உணவு, உடை என்று எல்லா விஷயங்களிலும் என்னை ஒரு குழந்தையாகவே பாவித்து கவனம் செலுத்துவார். கல்லூரி செல்லும் வயதில் கூட.

என்னைப் பண்பட்ட மனிதனாக்க, நல்ல எண்ணங்களை உரமூட்டியவர் என் அம்மா. என்னிடம் அவர் காட்டிய பிரியம், பரிவுணர்வு எல்லாம் இனி இல்லை. ஒரே நாளில் இல்லை என்று ஆகிவிட்டது. எல்லாமே பொய்யாகத் தோன்றின. எதுவுமே நிரந்தரமில்லை.

''பிரேம்... பிரேம்''

சிந்தனை கலைந்தது.

''எவ்வளவு நேரமா கூப்பிடறேன்... என்னாச்சு உனக்கு? எப்ப ஊருக்கு வந்தே?'' - குடும்ப நண்பர் ரமணன் நின்றிருந்தார்.

விஷயம் தெரிந்ததும், தான் ஊரில் இல்லாமல் போனது குறித்து வருந்தினார்.

சோர்ந்த என் முகத்தை ஆராய்ந்தவராக, என்னை அருகிலிருந்த உணவகத்துக்கு அழைத்தார். மறுத்துப் பார்த்தும் இயலாமல் போகவே, அவரோடு சென்றேன்.

எனக்கான உணவுக்கு மட்டும் ஆர்டர் தந்துவிட்டு, ஒரு சர்க்கரை இல்லாத காபி தனக்கு எடுத்துக் கொண்டார்.

''அம்மாவோட இழப்பு தாங்க முடியாததுதான். அதுக்காக பட்டினியா இருந்தா போனவங்க திரும்ப மாட்டாங்க. உங்க அம்மா இருந்திருந்தா உன்னைச் சாப்பிடாம போக அனுமதிப்பாங்களா?'' - ரமணன் பேசிக் கொண்டேயிருந்தார்.

என் அம்மாவின் முகம் மீண்டும் மேலெழுந்தது.

''நீங்க கூட சாப்பிடலாமே...''- நிலை

மையை இயல்பாக்க முயன்று கேட்டேன்.

''எனக்கு கொலஸ்ட்ரால், டயாபடீஸ் எல்லாமே இருக்கு. மனசுக்குப் பிடிச்சதைச் சாப்பிடாம என்ன வாழ்க்கைனு நினைப் பேன். ஆனா என் மனைவி, மகளுக்கு ஆதாரம் நான்தானே. அவங்களுக்காக நான் என் வாழ்க்கையைப் பாதுகாக்கணுமே. அவங்களுக்காக எனக்குப் பிடிச்ச உணவைத் தவிர்க்கறேன்.''

என் அம்மாவின் குரலில் ஒலிக்கும் அதே பரிவுணர்வு, அதே நேசம். உணர்வு கள் உயிருள்ளவை. என்றும் இறப்ப தில்லை. என் அம்மா என் நினைவுகளில் இருக்கிறார். இந்த ரமணனில் இருக் கிறார். என்னைச் சுற்றியுள்ள யாரிடமும் என் அம்மா இருக்கக்கூடும் என்றென் றைக்குமாய். கொஞ்சம் ஆறுதலாய் உணர்ந்தேன். ●



அம்மாவோட இழப்பைத் தாங்க முடியாதுதான், அதுக்காக பட்டினியா இருந்தா போனவங்க திரும்ப மாட்டாங்க.

ஜி.எஸ்.மனோகர்

# மரபின் மைந்தன் முத்தையா




சிவாஜி கணேசன், நாடறிந்த நல்ல நடிகர் என்பது எல்லோருக்கும் தெரியும். அதே போல அவர் வேட்டையாடுவதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் என்பதை வெகு சிலரே அறிவர். அவருக்கு, வேட்டையாடுவதன் மூலம் நல்ல நண்பராகி பிறகு உறவினரான வேட்டைக்காரன்புதூர் முத்துமாணிக்கம், சிவாஜி கணேசனோடு வேட்டையாடிய அனுபவம், இருவருக்கும் இடையேயான நட்பு போன்றவற்றை இத்தொடரில் பகிர்ந்துக்கொள்கிறார்...



கவிதை, சுயமுன்னேற்றம் என இதுவரை 45-க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். 'நமது நம்பிக்கை' என்ற சுயமுன்னேற்ற மாத இதழ், 'ரசனை' என்கிற இலக்கிய இதழ் ஆகியவற்றின் ஆசிரியராக உள்ளார். இவரது கவிதைகள் மதுரை தியாகராயர் கலைக் கல்லூரியிலும், கோபி கல்லூரியிலும் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. 1995ல் இவரது கருத்துருவாக்கத்தில் மாபோஸேல் நிறுவனம் தயாரித்த எய்ட்ஸ் தடுப்பு விளம்பரம், தேசிய அளவில் இரண்டாவது இடத்தைப் பிடித்து வெள்ளிப் பதக்கம் வென்றது.

ஒடையகுளத்தில் நடக்கப் போகும் இந்த நட்பு முறைப் பந்தயத்தை வேடிக்கை பார்க்க, அக்கம் பக்கத்து கிராமங்களிலிருந்தும் 'ஜேஜே' என்று ஜனம் கூடியிருந்தது. எல்லோருடைய பார்வையும் குவிந்திருந்தது, மைதானத்தில் கனகம்பீரமாய் விளையாடிக் கொண்டிருந்த முத்து மாணிக்கத்தின் மீது தான். ஆறடிக்கும் அதிகமான உயரம். 'இண்' ணென்றிருந்த தேகம். உடற்பயிற்சியிலும் வேட்டையிலும் உரமேறிப் போன உடம்பு. சலசலப்பு காட்டும் கூட்டத்தின் நடுவிலும் சிறிதும் சிதறாத கவனம்.

ஒரு கையால் ஏந்திக் கொடுத்து, மறு கையின் பலமான பிரயோகத்தில் சர்வீஸ் போட, 'விர்'ரென்று போனது விசையுறு பந்து. இருபதுகளைக் கடந்திருந்த அந்த இளைஞரிடம், விளையாட்டு வேகத்தைப் போலவே விளையாட்டு விதிகளைக் கடைப்பிடிக்கும் உறுதியும் இருந்தது.

அப்போதெல்லாம், மைதானத்தில் எங்கு வேண்டுமானாலும் நின்று கொண்டு சர்வீஸ் போடுகிற வழக்கமில்லை. யார் யார் எங்கு நிற்க வேண்டும், எங்கிருந்து சர்வீஸ் போட வேண்டும், ஏறி வருகிற பந்தை எப்படி எதிர்த்தடிக்க வேண்டும் என்பதிலெல்லாம் கடுமையான விதிமுறைகள் நிலவி வந்த காலம்.

விவசாயமும் விருந்து உபசரிப்பும் பழகிப் போயிருந்த ஒடையகுளம் கிராமத்துக்கு, ''லவ் ஆல்'' என்று தொடங்குகிற வாலிபால் விளையாட்டு, அதிசயமாகவும் சுவாரசியமாகவும் இருந்தது. ''அரிநமோத்துசிந்தம்'' என்று தொடங்கிய அரிச்சுவடிப் படிப்பை முதல் ஃபாரம், இரண்டாம் ஃபாரம் வரை தொடர்ந்தவர்களுக்குக் கூட இந்த வாலிபால் விளையாட்டு, புத்தம் புதிய அனுபவம்தான்.

பக்கத்து ஊர் மிராசுதாரரிய முத்துமாணிக்கக் கவுண்டர், பல ஊர்களுக்குச் சென்று வாலிபால் போட்டிகளில் வென்று வரும் பரிசுகள் ஏராளம். கோவை வேளாண்மைக் கல்லூரியின் வாலிபால் அணி, வேட்டைக்

# சிவாஜி த சுப்ரீம் பாஸ்! 1

காரண்புதூருக்கு வந்திருந்தது. அந்த விளை யாட்டை, உறவினர்கள் மற்றும் நண்பர் களின் வேண்டுகோளுக்கிணங்க, ஒடைய குளத்திலேயே நட்புமுறைப் பந்தமாய் நடத்திக் கொடுக்க வந்திருந்தார் அவர்.

உடல் பலத்தோடு மனக்கட்டுப்பாடும் இருந்தால்தான் விளையாட்டில் கூட வெற்றி என்பதில் உறுதியாயிருப்பவர் முத்து மாணிக்கம். அவரது லாகவமான சர்விசி லும், பந்து போல துள்ளும் உடல் அசைவு களிலும் லயித்துக் கிடந்தது கூட்டம். தம்மு டைய அணியின் தளபதியாக, சுற்றிச் சுழன்று பந்தடித்துக் கொண்டிருந்தார்.

சூடுபறக்க போட்டி நடந்து கொண் டிருந்த மைதானத்துக்கருகே புழுதி கிளப்பிக் கொண்டு வந்து நின்றது கார் ஒன்று. கார் சத்தம் கவ னம் கலைத் ததில், கடைக் கண்ணால் பார்த் தார் முத்துமாணிக்கம். தட்சிணாமூர்த்தி இறங்கி வந்து கொண்டிருந்தார். காவல் துறையில் சப் இன்ஸ் பெக்டராக இருக்கும் நண்பர் இங்கே எங்கே? என்ற கேள்வியும் வாலிபால் போட் டியைப் பார்க்க வந்திருப் பார் என்ற சமாதானமும் சேர்ந்தே மனத்தில் எழுந்தன.

போட்டி முடிவில் வெற்றியையும் வியர்வை யையும் அள்ளிக்கொண்டு, ஊர்ப் பிரமுகர்களோடு பேசிக் கொண் டிருந்த நண்பர் தட்சிணாமூர்த்தியை நெருங்கி வந்தார் முத்துமாணிக்கம்.

**கொ**ங்கு நாட்டு ஜமீன்தார்களிடம் சில தனித்தன்மைகள் உண்டு. மேல்படிப்பு தந்த புத்திசாலித்தனம், உலக நடப்புகளை உணர்ந்த நடவடிக்கைகள், வேற்றுமை பார்க் காமல் பழகும் இயல்பு, குடும்பப் பெரிய வர்களிடம் அளவு கடந்த மரியாதை, எல் லோரிடமும் பரிவு காட்டும் பேச்சு ஆகி



✸ சிவாஜி, முத்துமாணிக்கம், தட்சிணாமூர்த்தி



நிறுவனத்தின் பெயர். இதன் மேலாளராக வேலை பார்த்தவர், பின்னாளில் திரைப் படத் தயாரிப்பாளராகப் புகழ் பெற்ற ஏ.எல்.சீனிவாசன். கவியரசு கண்ணதாச னின் மூத்த சகோதரர் இவர்.

சிவாஜிகணேசன் முத்துமாணிக்கத்தைச் சந்திக்க விரும்பியது சினிமா தொடர்பான விஷயத்துக்காக அல்ல! அவருக்கு மிகப் பிரியமான வேட்டைக்கலை தொடர்பாக. சிவாஜியின் நெருங்கிய நண்பர்களில் ஒருவர், சேலத்தில் துப்பாக்கிக் கடை வைத் திருந்த செல்லமுத்து என்பவர். ஆர்மரி செல்லமுத்து என்று அழைக்கப்பட்ட அவர், சிவாஜியை அழைத்துக் கொண்டு வேட்டை என்கிற பெயரில் காட் டுப் புறாக்களையும், முயல்களையும், காடை கௌதாரிகளையும் சுட்டுக் கொண்டு வரு வதுண்டு.

> “உண்மையான வேட்டை அனுபவம் உங்களுக்கு வேண்டுமென்றால் வேட்டைக்காரன்புதூர் முத்துமாணிக்கம் தான் அதற்குச் சரியானவர்”

யவை அந்த அருங்குணங் கள்.

இந்தக் குணங்களை தம் இளமைப் பருவம் தொடங்கி அளவுக்கதிக மாகவே கொண்டிருந்தார் முத்துமாணிக்கம். எல்லாத் தரப்புகளிலும் அவருக்கு நண்பர்கள் உண்டு. அப்படியொரு நண்பர்தான் தட்சிணாமூர்த்தி. இருவருக்கும் பொதுவான நண்பராய் விளங்கியவர் மருத்துவர் ரங்க நாதன். அவர் மூலமாகத்தான் தட்சிணா மூர்த்தி அறிமுகம்.

எடுத்த எடுப்பிலேயே தான் வந்த விஷ யத்தைப் போட்டு உடைத்தார் தட்சிணா மூர்த்தி. ''சிவாஜி கணேசன் வந்திருக்கிறா ருங்க. உங்களைச் சந்திக்கணும்னு பிரியப் படறாரு.''

சினிமா உலகம் முத்துமாணிக்கத்துக் குப் புதியதல்ல. சென்னையில் பிரசி டென்சி கல்லூரி மாணவராக இருந்த காலத் திலேயே திரைப்பட விநியோகஸ்தராக விளங்கியவர்தான் முத்துமாணிக்கம். கோயம்புத்தூர் பிக்சர்ஸ் என்பது, அவர்கள்

அந்த நாட்களில் புகழ் பெற்ற ஒளிப்பதிவுக் கலைஞராக விளங்கிய சுப்பாராவ் போன்றவர் கள், ''உண்மையான வேட்டை அனுபவம் உங்களுக்கு வேண்டு மென்றால் வேட்டைக்காரன்புதூர் முத்து மாணிக்கம்தான் அதற்குச் சரியானவர்'' என்று சிவாஜியிடம் சொல்லி வந்திருக் கிறார்கள். இப்படி நிறையக் கேள்விப்பட்டு முத்துமாணிக்கம் என்ற மனிதர் மீது காணா மலேயே கனிந்த மதிப்பும் அன்பும் சிவாஜி யின் மனத்தில் முளைவிட்டிருந்த நேரம் அது. இதையெல்லாம் முத்துமாணிக்கம் அறிந்திருக்கவில்லை.

சிவாஜி கணேசன் தன்னைச் சந்திக்க விரும்புகிறார் என்று கேட்டவுடன் ஒரிரு ஆண்டுகளுக்கு முன் தான் பார்த்த 'பரா சக்தி' திரைப்படம் நினைவுக்கு வந்தது அவருக்கு. அந்தப் படத்தை அவர் பார்க்கச் சென்றதே ஒரு சுவையான அனுபவம்.

**(வருவார்)**

ஞானமணி



# ஆனந்தம்!

நமக்கு எண்ணி முடியாத ஆசைகள் இருக்கின்றன. ஆனாலும் என்றோ ஒரு நாள் நாம் ஆசைப்படும் வஸ்துக்கள் நம்மை விட்டுப் பிரிவது அல்லது நாம் அவற்றை விட்டுப் பிரிவது சர்வ நிச்சயம். சாவின் மூலம் இந்தப் பிரிவு ஏற்படாமல், அதற்கு முந்தி நாமாக ஆசைகளை ராஜினாமா செய்து விட்டுவிட்டால் அத்தனைக்கத்தனை ஆனந்தமாயிருக்கலாம். நமக்கு எத்தனை ஆசைகள் இருக்கின்றனவோ அத்தனை முளைகளைத் துக்கத்துக்கு அடித்துக் கொண்டு, நம்மைக் கட்டிப் போட்டுக் கொள்கிறோம். ஆசைகளைக் குறைக்கக் குறைக்கத் துக்கஹேதுவும் குறையும். இந்தப் பிறவி முடியுமுன் நாம் சகல ஆசைகளையும் விட்டுவிட்டால் மறுபடியும் பிறந்து அவஸ்தைப்படவே வேண்டாம்; அப்படியே பரமாத்மாவில் கரைந்து ஆனந்தமாகிவிடலாம்.

மனிதன் மற்ற விலங்குகளைவிட விசேஷ ஞானம் உடையவன் என்று பெருமைப்படுகிறோம். ஆனால், இவன் மட்டும் அவற்றைவிட விசேஷமாக என்ன செய்துவிடுகிறான்? நாயும் நரியும் கரப்பான் பூச்சிகளும்கூடத்தான் சாப்பிடுகின்றன. சந்ததி விருத்தி செய்கின்றன, சாகின்றன. பொதுவாக மனிதனும் இதற்கு மேல் எதுவும் செய்வதாகத் தெரியவில்லை. அப்பொழுது இவனது விசேஷ ஞானத்தில் பெருமைப்பட என்ன இருக்கிறது? எல்லாவற்றிலும் பெரிய ஞானம் நிலைத்த ஆனந்தத்துக்கு வழி கண்டு கொள்வதுதான்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்

**13**

# பாரதிபாலன்

# காற்று வரும் பருவம்!

"ஐயா... ஐயா..."

"............"

"ஐயாவ்!" அந்தக் குரல் அலறலாக ஒலித்திற்று.

அம்மா வீட்டுக்குள்ளிருந்து ஓடி வந்தது.

"யாரது... என்...னா...ப்பா..."

"ஐயா இருக்கிறாரா ஆச்சி? எழுப்புங்க..."

"எதுவும் பிரச்னையா...?"

"எழுப்புங்கண்டா..." அவன் குரலில் அதட்டலும் அழுகையும் பொங்கிற்று. அம்மா பதறி விட்டது. ஐயாவை உலுக்கி எழுப்பியது. கைபட்டதுமே விசுக்கென்று தலையைத் தூக்கியவர், கலக்கமாகப் பார்த்தார். "எந்திரிங்க..." அந்த அலறல் குரலைக் கேட்டு எழுந்தவர் ஒருகணம் நிலைதடுமாறிவிட்டார். வாசலில் கொங்காணி மகன். படபடவென்று நடுவீட்டுக்கே வந்துவிட்டான். அவன் இவ்வளவு தூரம் வரமாட்டான். ஏதோ அசம்பாவிதம். தடுமாறி எழுந்து வேஷ்டியைக் கட்டினார்.

"நம்ம சேவாலை அடிச்சுப்பிட்டாங்கே!"

"சேவாலையா...?"

"ஆமாங்கையா..."

"யாரு... யாரு...?"

"அசலூர்க்காரங்க" என்று ஒரு திசையைக் காட்டினான்.

வாசலில் இரண்டு மூன்று தலைகள் எட்டிப் பார்த்தன.

"நம்ம சேவாலையா?" - அம்மா நெஞ்சில் கைவைத்துப் பதறியது.

"வயக்காட்டுப் பக்கம் போனாரு. ஒடப்பு ஒடுதாண்டு காலெ வெச்சு மிதிச்சு மிதிச்சுப் பாத்துட்டு இருந்தாரு. அப்பத்தேன் 'அவிங்க' வந்து ஐயாட்ட என்னவோ கேட்டாங்க. அவிங்கே பேச்சே ஒரு வடியா இருந்தது. அந்த வாக்குலெ கிழக்காலெ மாட்டை ஓட்ட விட்டுட்டு ஓடினேன். நம்ம ஐயா பொறுமையாத்தேன் பேசினாரு. அவிங்கதேன் சகட்டுமேனிக்குப் பேசினாங்க. இவரு கையை ஓங்குனாரு. அவிங்க ஏழு எட்டு பேர். திட்டம் போட்டுத்தேன் வந்திருப்பாங்க போல. சைக்கிள் செயினைக் கொண்டு பளார் பளார்ண்டு அடிச்சுப் போட்டாங்க. ஒரே ரத்தம். செல்லாண்டியும் மண்டையும் அந்தாக்குலெ ஓடிவந்தாங்க. இப்ப ஆசுபத்திரிக்குக் கொண்டு போறாக... விசயம் தெரிஞ்சு கோவிந்து ஐயாவும், நாகுவும் சின்னமனூருக்குப் போய்ட்டாக..."

ஐயா பதறி விட்டார். அம்மா குரலெடுத்து அலறியே விட்டது. இங்கிட்டு அங்கிட்டுப் போனவர்கள் எல்லாம் வீட்டுக்குள் எட்டிப் பார்த்தனர்.

தெரு முழுக்க ஜனக்கூட்டம்! ஓட்டமும் நடையுமாகத்தான் இருந்தது. நாட்டாமைக்காரர் வெள்ளை உடுத்தி பஸ் ஸ்டாப்புக்கு வந்தார். ஐயாவும் நாயக்கரும் இன்னும் இரண்டு மூன்று முக்கியஸ்தர்களும் சின்னமனூருக்கு பஸ் ஏறினர். அவர்கள் கூடவே இளந்தாரிகள் கூட்டம் பஸ்ஸில் தொற்றிக் கொண்டது.



“அவிங்க ஏழு எட்டு பேர். திட்டம் போட்டுத்தேன் வந்திருப்பாங்க போல. சைக்கிள் செயினைக் கொண்டு படீர் படீர்ண்டு அடிச்சுப் போட்டாங்க”

''எதுக்கு இத்தனை பேர்?'' என்றார் நாட்டாமைக்காரர்.

''வர்றோம்.''

''வீணா எதுக்கு?''

''சும்மா வாரோம்.''

தலையை எண்ணி நாட்டாமைக்

காரரே டிக்கெட் வாங்கி விட்டார். அடர்ந்த புளிய மரக் குகைக்குள் புகுந்து பஸ் இரைச்சலோடு நகர்ந்தது.

**சி**ன்னமனூரில் சுப்பிரமணி டாக்டர் உதட்டைப் பிதுக்கிவிட்டார். போலீஸ் கேஸ், ஜாதிச் சண்டை என்று பெரிதாகப் பிரச்னை வரும் என்ற நினைத்தாரோ என்னவோ! அதற்குள் போலீஸும் வந்து விட்டது. ஐயாவிடமும் ஊர் நாட்டாமையிடமும் எழுதி வாங்கிக் கொண்டது. டாக்ஸி பிடித்து பெரியகுளம் கவர்மெண்ட் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள். ஊரைக் கடந்துதான் போக வேண்டும். போகிற வழியில் டாக்ஸி, ஊரில் சற்று வேகம் குறைத்து, ஒரு டீக்கடையில் தகவல் சொல்ல சற்று நின்றது. அவ்வளவுதான்! கூட்டம் மொய்த்து விட்டது. அந்தக் கூட்டத்தைச் சமாதானப்படுத்தப் பெரும்பாடு! அதை விலக்கி நகர முடியவில்லை. மூச்சுத் திணறி விட்டது. எல்லாம் எட்டி எட்டிப் பார்த்தது. ஜெயபால் ரத்தக் காயமாகக் கிடந்தான். பின் சீட்டில் தலை துவண்டு கிடந்தது. மூச்சுப் பேச்சைக் காணோம்!

வண்டி நகர்ந்து விட்டது.

ஒரே பதற்றம்தான். கூட்டம் கூட்டமாகப் பேசினர். பெண்கள், சிறுவர்கள் என்று வீட்டு வாசலிலும் இளவட்டங்கள் இங்குமங்குமாய் ஓட்டமெடுத்துக் கொண்டிருந்தன. ஒன்றிரண்டு பெரியவர்கள் தோழியப் பிள்ளை வீட்டில் கூடினார்கள். தோட்டம், தொரவு, வயல் என்று பெரிய புள்ளி அவர். போதாது என்று வியாபாரம் வேறு. லாரி, டிராக்டர் என்று வசதி. ஊரிலே அவர் வீட்டில்தான் டெலிபோன் உண்டு. தாசில்தாராகட்டும், போலீஸ் சப்-இன்ஸ்பெக்டராகட்டும், தேர்தலில் போட்டியிடுபவராகட்டும் தோழியப் பிள்ளையைக் கலக்காமல் ஒன்றும் செய்யமாட்டார்கள். அவர் வீட்டு வாசலில் 'பெஞ்சு' போட்டு ஏழு எட்டு பெரிய மனிதர்கள். வெளி லைட்டையும் போட்டு விட்டார். பேசிக்கொண்டே இருந்தனர். பதினொரு மணி இருக்கும். ஒரு போன் வந்தது. 'ஜெயபால் உசுரு போய்விட்டதாம்!'

**அ**வ்வளவுதான்! சுழல் காற்றில் மாட்டிக் கொண்ட தீப்பொறி மாதிரி ஊரே பற்றி எரியத் தொடங்கிற்று. உறவுக்காரர்கள், பக்கத்து வீட்டுக்காரர்கள், பழக்கமானவர்கள், பார்த்தவர்கள், கேட்டவர்கள் என்று எல்லாமே பொங்கிவிட்டது. நெஞ்சில் அடித்துக் கொண்டும், தலையில் அடித்துக் கொண்டும் அழுதது. அழுகை சட்டென்று ஆத்திரமாக வெடித்தது.

அந்தத் தெரு ஜனங்கள் திரண்டு தோழியப் பிள்ளை வீட்டுக்குக் கிளம்பிற்று. அதோடு குயவர் தெருவும் பூக்காரத் தெருவும் சேர்ந்து கொண்டன. வாய்க்கால் தெருவில் இருந்தும் மந்தைத் தெருவில் இருந்தும் கூட ஆட்கள் சேர்ந்தனர். தோழியப்பிள்ளை வீட்டு வாசலில் ஏற்கெனவே ஒரு கூட்டம் கூடி நின்றது. இந்தக்



## எலெக்ஷன் வாய்ஸ்!

''மற்ற கட்சிகளைவிட, பல வகையிலும் பாரதிய ஜனதா முந்திய நிலையில்தான் உள்ளது. பிரதமர் வேட்பாளரை நாங்கள்தான் முதலில் அறிவித்தோம்; காங்கிரஸ் கட்சிக்கு அதில் கூட தெளிவு இல்லை.

கூட்டத்தைப் பார்த்ததும் அந்தக் கூட்டத்துக்குக் கொஞ்சம் தைரியம் கூடிற்று!

''இப்படியே வுட்டுட்டா, தொக்காப் போயிடும். ஒரு உசிரை வாங்கிப் போட்டாங்கய்யா.''

''பொறுமையா இருங்கப்பா.''

''போலீஸுக்குச் சொல்லுங்க.''

''போலீஸு எதுக்குடா, அதெல்லாம் அவிங்க தன்னக்கட்டிப் போடுவாங்கே!''

''மடமடண்டு போயி ரெண்டு பயலுகள இழுத்துப் போட்டு ரெண்டு 'அப்பு' அப்புனாத்தேன்...''

''அப்புராணியைக் கொண்டுட்டானே!'' என்று ஒரு பெண் அழுதது. தோழியப் பிள்ளை வீட்டுப் பெண்களும் வாசல்படியில் நின்றிருந்தனர். அவர்கள் இப்படியெல்லாம் வெளியில் வந்து நிற்க மாட்டார்கள்.

''ஐயா யோசிக்க வேண்டாம் நாங்க வுடுறதா இல்ல. பெரியவுகளக் கலக்காம பண்ணிப்புட்டாங்கனு வரவேண்டாம். அதுக்குத்தான் அய்யாவுகட்ட சொல்லியாச்சு.''

''சேவி, பொறுமையா இரு. எனக்கும் ஆத்திரம்தேன். ஊரையும் பார்க்க வேண்டியிருக்கு. போலீஸ் கேஸாயிருக்கு. ஊர் நாட்டாமையும் இல்லெ. வெளியூர்க்காரங்கதேன் அடிச்சதுங்குறாங்க...''

''இவிங்கதேன் ஆள் கூட்டியாந்தது.''

''அதத்தேன் நான் சொல்றது. இப்பவே இரண்டு மூணு ஊருகளுக்கு ஆள அனுப்புங்க. விடியுங்காட்டி அவிங்க பக்கம் ஒரு பொணமாச்சம் விழணும்.''

''மொனக்குச்சி மவனே, வாய வச்சுகிட்டு இருக்க மாட்டா! அதான் சொல்றேன்லெ.''

''என்னய்யா சொல்றீக? சொல்றோம் சொல்றோமுண்டாக்க என்ன அர்த்தம்...? நாளப் பின்ன ஒத்தையிலெ நம்ம பயலெ போக வுடமாட்டாங்கே...''

தோழியப் பிள்ளை கூடவே இரண்டு மூன்று ஆட்கள் எப்போதும் இருக்கும். சோனையாபிள்ளையும் ராசு செட்டியாரும் மூக்கையா பிள்ளையும்தான் அது! தோழியப்பிள்ளை ராசு செட்டியாரை அனுப்பி உறங்காப் புலித் தேவரைக் கூப்பிட்டு வரச் சொன்னார். உறங்காப்புலித் தேவரும் வசதியானவர்தான்.

''கொண்டு வாராகண்டாக. அதான் வேலு பிள்ளை வூட்டு வாசல்லெ நின்னுகிட்டு இருந்தேன்.''

''வூட்டுல யாரு இருக்கிறது?''

''ஒருத்தரும் இல்லெ. நாடாருதேன் கதவத் தொறந்து சாமான் சட்டெல்லாம் ஒதுக்கிட்டு இருக்கார். வீட்டுலெ வெச்சுத்தானே தூக்கிட்டுப் போவணும்.''

''ஆமா! ஆமா!''

''அவுக சொந்த பந்தமெல்லாம் வரணும். தூரம் தொலை வெட்டு. ரொம்ப



**கொள்கை பிடிப்புள்ள கட்சிகளுடன்தான், விருப்பமுள்ள கட்சிகளுடன் தான் சேருவோம் என்று சொல்லி, கூட்டணி சேர்ந்தோம்; கூட்டணி தொகுதிப் பங்கீடும் செய்தோம். இதிலும் நாங்கள்தான் முதல்.**

**இந்த நிலையில், இப்போது சொல்கிறேன்... நாங்கள்தான் மத்தியில் அடுத்த ஆட்சியை உருவாக்கப் போகிறோம்; இதில் சந்தேகம் இல்லை."**

**- வெங்கையா நாயுடு, பி.ஜே.பி.**

நேரம் வெக்க முடியாது.''

''ப்சு.''

''நேத்திக்கு களத்துலெ பாத்துப் பேசிப்புட்டுத்தேன் நகர்ந்தேன். நெனச் சாலே ஈரக்கொலை நடுங்குதுய்யா.''

கூட்டம் இவர்களைப் பார்த்துக் கொண்டே இருந்தது.

''எங்க தெரு பக்கமெல்லாம் ஒரே கூச்சல். ஒவ்வொரு பயலும் தவ்வுறான்.''

''முக்காதுட்டுக்கு பெறாத பய; பேசுற பேச்சப் பாருங்க.''

''வுடுப்பா பேசட்டும்'' என்றார் உறங்காப்புலித் தேவர். தோழியப்பிள்ளை இருப்புக் கொள்ளாமல் இருந்தார். 'நாட்டாமைக்காரரை எங்க காணலெ?' என்று தேவர் தோழியப்பிள்ளையைப் பார்த்தார். 'அவருதான் கூடப் போயிருக் கார். மணி பதினொன்றரை தொட்டு விட்டது. ஊர் இன்னும் விழிப் பாகவே கிடந்தது. அங்கொன் றும் இங்கொன்றுமாய்க் கூச்சல் எழுப்பிக் கொண்டிருந்தது.

''நாளைக்கு நம்ப பயக எல்லாம கடைய அடைக்கச் சொல்லணும்'' என்றார் தேவர்.

''செய்யலாம். நம்ம ஸ்கூலெயும் மூடச் சொல்லிடுறேன்'' என்றார் தோழியப்பிள்ளை.

''வேலை வெட்டிக்கும் ஒரு பய போக மாட்டாங்கே'' என்று



''இங்க பாருங்க...'' என்று தோழியப்பிள்ளை கூட்டத்தைக் கைகாட்டினார்.

''எப்பா, சித்த பொறுங் கப்பா. முதலெ ஆகவேண்டிய காரியங்களை முடிப்போம். தவ்வுனாப்புலெ என்னய்யா ஆவப்போவுது?''

''ரெண்டுல ஒண்ணு பாத்துப்பிடணும்.''

''செய்யலாமுடா.''

''எப்ப? இன்னும் ரெண்டு கொல வுழுந்த பொறவா? பெரிய மனுஷங்க பேசுற பேச்சப் பார்றா. பெரிய புடுங்கி மாதிரிப் பேசிக்கிட்டு கெடக்காங்க. அவிங்க வூடுகள்லெ விழுந்தாத் தெரியும்.''

**"போர் மேகம் சூழ்ந்திருக்கு மன்னா..."**

**"அதனாலதானே, அரண்மனை வைத்தியரை வெளியே எங்கும் போகாம, பக்கத்திலேயே வைச்சிருக்கேன்!"**

**-பி.ஜி.பி. இசக்கி, நெல்லை.**

கூட்டத்தில் ஒரு குரல். குரல் வந்த திசையைப் பார்க்கத் திரும்பிய போதுதான் வேகமாக ஒரு பிளசர் கார் ஊருக்குள் வந்தது. சற்று வேகம் குறைந்து தெருவுக்குள் நுழைந்தது. அவ்வளவுதான்! மொத்தக் கூட்டமும் விழுந்தடித்துக் கொண்டு அங்கு ஓடிற்று!

*(காற்று வீசும்)*

● "எதற்கும் இருக்கட்டும்" என்று சின்னச் சின்ன வன்னியர் அமைப்புகளை தனது வலைக்குள் அள்ளிப் போட்டது தி.மு.க. இருபத்தாறு வன்னிய அமைப்புகள் ஒன்றுகூடி, வன்னியர் நல வாரியம் அமைத்ததற்காக ஸ்டாலினை அழைத்து பாராட்டு விழா நடத்தின. பா.ம.க., கூட்டணியை விட்டுப் போன பின்பு, இந்த வன்னிய அமைப்புகள் தங்கள் தி.மு.க. ஆதரவுப் போக்கில் தீவிரம் காட்டாமல் ஒதுங்கி நிற்கின்றன. இந்த வன்னிய அமைப்புகளை ஒருங்கிணைத்த கட்டிடத் தொழிலாளர் சங்கத் தலைவர் பொன்.குமார், சமீபத்தில் முதல்வரைச் சந்தித்தபோது, அவருடன் ஒன்றிரண்டு அமைப்புகளைச் சேர்ந்தவர்கள் தவிர யாரும் செல்லவில்லை. "எத்தனை வன்னியர்களுக்கு தி.மு.க. மற்றும் காங்கிரஸ் கூட்டணியில் சீட் கொடுக்கிறார்கள் என்று பார்த்து, பின்னரே பிரசாரத்தில் ஈடுபடுவது என்று முடிவெடுத்திருக்கிறோம். மேலும், இத்தனை ஆண்டு காலம் ஜெயலலிதா ஆதரவாளராக இருந்த பொன். குமார், தமது சுயலாபத்துக்கு எங்களைப் பயன்படுத்திக் கொள்கிறாரோ என்ற சந்தேகம்தான்" என்கிறார்கள் வன்னிய அமைப்புகளைச் சேர்ந்தவர்கள். இந்த நிலையில் இந்த வன்னிய அமைப்புகளை 'பாடுபட்டு' தி.மு.க. ஆதரவு நிலையை எடுக்க வைத்த அமைச்சர்கள் எ.வ.வேலுவும், பொன்முடியும், ஸ்டாலினுக்குச் சமாதானம் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

● திரைப்படப் பத்திரிகையாளரும், பி.ஆர்.ஓ.வுமான துரை. ராமச்சந்திரன் அதிரடியாகவும், வித்தியாசமாகவும் ஏதாவது செய்து கொண்டிருப்பவர். 2006ம் வருடம் சட்டமன்றத் தேர்தலில் விருத்தாசலம் தொகுதியில் விஜயகாந்தை எதிர்த்துப் போட்டியிட்டபோது, 'என்னை ஜெயிக்க வைத்தால் வீட்டுக்கு ஒரு ஆட்டுக்குட்டி கொடுப்பேன்' என்று வாக்குறுதி கொடுத்தார். அதற்கு அவசியம் இருக்காது என்ற தைரியம்தான்! இந்த பாராளுமன்றத் தேர்தலில் அபிஷேக் யாதவ்



*எ.வ. வேலு



* அபிஷேக் யாதவ்

## வீட்டுக்கு ஒரு பசுமாடு!

என்று பெயரை மாற்றிக் கொண்டு, சமாஜ்வாடி கட்சியில் இணைந்து அதன் தமிழக பொதுச் செயலாளராக ஆகிவிட்டார். சில படங்களிலும், டி.வி. சீரியல்களிலும் நடிக்கும் இவர், ஏதாவது ஒரு தொகுதியில் போட்டியிடுவதாக இருக்கிறார். வாக்குறுதி ...? 'வீட்டுக்கு ஒரு பசுமாடு'!

- ஸ்ரீநி

# அமரர் கல்கி நினைவு

## படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு- ரூ.5,000/-**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

**விதிமுறைகள் :**

* கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
* சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
* அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
* படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால்,

# சிறுகதைப் போட்டி 2009

அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

✱ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

✱ தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

✱ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

✱ பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

✱ முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**

**கல்கி பில்டிங்ஸ், 47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.**

✱ **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.**

✱ **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.**

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**- ஆசிரியர்**






# சலுகைகள்

''பாண்டவர்கள் ஐந்து ஊர்களையாவது கொடுங்கள் என்று கேட்டபோது, அதையும் தர மறுத்தார்கள் கௌரவர்கள். இறுதியில் பாரதப் போரில் வென்றவர்கள் பாண்டவர்கள்தான். அதுபோல நாங்கள் ஐந்து தொகுதி கேட்டோம். லாலுவும், பாஸ்வானும் தர மறுத்து விட்டார்கள். ஆனாலும் இறுதி வெற்றி எங்களுக்குத்தான்!'' என்று முழங்கி இருக்கிறார் பீகார் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் அனில் சர்மா.

***(மகாபாரதம் ரேஞ்சுக்கு சிந்திக்கறாங்களே, தர்மம் வென்று விடுமா?)***

**1977**ல் முதல் முறையாக ஆட்சிக்கு வந்தது முதல், தொடர்ந்து மே.வங்காளத்தில் ஆட்சி செய்யும் இடதுசாரி அரசு, இந்த மார்ச்சில் சமர்ப்பித்த பட்ஜெட்டின் ஹைலைட்டே இரண்டு ரூபாய் அரிசி திட்டம்தான்!

***(அரசியல் கடலில் அரிசி அலைகள் ஓய்வதில்லை)***

ஐ.நா. சபையில் உயர்பதவி வகித்து வந்த கோட்டு சூட்டுக்காரருக்கு அவசரம் அவசரமாக கதர் வேட்டி, சட்டை மாட்டி, கேரளாவில் திருவனந்தபுரம் தொகுதியில் வேட்பாளராக நிறுத்தி இருக்கிறது காங்கிரஸ். அதனால் காங்கிரஸ் அடிமட்டத் தொண்டர்களுக்கும், வேட்பாளரான சசிதரூருக்கும் இடையில் பெரும் இடைவெளி. அவருக்கு மலையாளமே ஒழுங்காகப் பேசத் தெரியாது என்று ஒரு விமர்சனம்.


* ஹைடெக் திருமா

***(முப்பது நாளில் மலையாளம் புக் அனுப்பி வைக்கட்டுங்களா?)***

காங்கிரஸ் கட்சியில் சேர்ந்துள்ள முன்னாள் கிரிக்கெட் கேப்டன் அசாருதீனை, ராஜஸ்தானில் வேட்பாளராக நிறுத்த விரும்பியதால், அண்மையில் அவர் ஜெய்ப்பூர் வந்திருந்தார். ஆனால் உள்ளூர் முஸ்லிம் அமைப்பினர், ''இந்த மாநிலத்துடன் துளியும் சம்பந்தமில்லாத அவரை எப்படி இங்கே வேட்பாளராக நிறுத்தப் போச்சு?'' என்று கடும் எதிர்ப்பு தெரிவிக்க, ''தேர்தலில் போட்டியிடுவதற்காக அசார் இங்கே வரவில்லை; ஊர் சுற்றிப் பார்க்க வந்திருக்கிறார்'' என்று சொல்லி சமாளித்து விட்டது காங்கிரஸ். உ.பி.யில் மொரதாபாத் தொகுதி காங்கிரஸ் வேட்பாளர் அசார் என்பது லேட்டஸ்ட் நியூஸ்.

***(ஏன், ஆந்திராவுல ஐயா போணி ஆகமாட்டாரா?)***

லில்லி, சல்லி, கரீனா, தேஜா - சட்டீஸ்கர் மாநிலத்தில் பாஸ்டர் பகுதியில் எங்கே மீட்டிங் என்றாலும் இந்த நான்கு பேரும் வந்து தரோவாக செக் பண்ணி கிளியரன்ஸ் கொடுத்தால்தான் மீட்டிங்கே நடத்த முடியும். யாரிந்த நான்கு பேர்? மாநில போலீஸின் வெடிகுண்டு பிரிவின் மோப்ப நாய்கள்! தெருவில் சுற்றிக் கொண்டிருந்த நாய்க் குட்டிகளைக் கொண்டு வந்து



சோ ஒரு டிராமா போடுவாரில்லை)

**பெ**ரிய கட்சிகளின் வேட்பாளர்கள் கட்சித் தலைமை அலுவலகத்தில் கால் கடுக்க காத்திருந்து, சீட் கேட்டு, மனு கொடுத்துக் கொண்டிருக்கும் பரபரப்பான காட்சிகள் அரங்கேறிக் கொண்டிருப்பது ஒரு பக்கம் என்றால், விடுதலைச் சிறுத்தைகள் கட்சி ரொம்பவே ஹைடெக் ஆகி விட்டது. சிதம்பரம், விழுப்புரம் தொகுதிகளில் போட்டியிட விருப்பம் உள்ளவர்கள் கட்சித் தலைவருக்கு, எஸ்.எம்.எஸ். மூலம் தகவல் சொன்னால் போதுமாம்.

*(ஹலோ! தொல்! ஜனங்களும் எஸ்.எம்.எஸ்.ல வோட்டு போட்டுடப் போறாங்க! ஜாக்கிரதை!)*

– பரத்ராம்

# ஓய்வதில்லை!

பயிற்சியளித்து மோப்ப நாய்களாக்கி விட்டார்களாம்!

*(இந்த நாய்கள் எலெக்ஷன் விதிகளை மீறுகிறவங்களையும் மோப்பம் மூலமா கண்டுபிடிச்சுடுமா?)*

**ம**.பி.யில் விதிஷா தொகுதியில் போட்டியிடும் பா.ஜ.க. மூத்த தலைவர் சுஷ்மா ஸ்வராஜ் அண்மையில் போபால் வந்திருந்தபோது, பத்திரிகையாளர்களிடம் கேஷுவலாகப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது பா.ஜ.க.வின் வெற்றி வாய்ப்பு பற்றிய கேள்விக்கு, ''பா.ஜ.க. கூட்டணிக்கு மெஜாரிடி கிடைப்பது சந்தேகம்தான். ஆனாலும், எங்கள் கூட்டணிக்கு காங்கிரஸ் கூட்டணியை விட அதிக சீட் கிடைத்தால் இன்னும் சில கட்சிகளைச் சேர்த்துக் கொண்டு ஆட்சி அமைத்து விடுவோம் என்பது உறுதி'' என்று சொன்னார்.

*(யாருக்கும் வெட்கமில்லைன்னு*



* எதிர்ப்பு அசார்...

# சுபம்-சிவம்

மீண்டும் ஆரம்பம்!

கணேச சாஸ்திரிகள், புது வருஷ பஞ்சாங்கத்துடன் என்னையும் விஜயாவையும் காண்பதற்கு வந்தார். விஜயா அடிக்கடி பஞ்சாங்கம் பார்த்து பல்வேறு சுபதினங்களை நினைவில் வைத்துக் கொள்வாள். நானோ வெகு அபூர்வமாகத்தான் பஞ்சாங்கம் பார்ப்பேன். ஆனால், ''தமிழ்ப் புத்தாண்டுப் பிறப்புக்கு கோயில்களில் பஞ்சாங்கம் படிக்க வேண்டாம்'' என்று தி.மு.க. அரசின் வாய்மொழி உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டதால், ''பஞ்சாங்கத்தைப் படித்தே தீருவது'' என்று கையில் வாங்கியதும் பிரித்தேன். பிரித்த பக்கத்தில் எனக்குப் புரியாத லிபியில் ஏதோ எழுதப்பட்டிருந்தது!



* 'ஹிந்தி மீரா'வுக்காக வகுப்புகள்

''இது என்ன, கிரந்த எழுத்தா?'' என்று கணேச சாஸ்திரிகளைக் கேட்டேன். ''ஆமாம்'' என்றார். ''கொஞ்சம் படிங்களேன், கேட்போம்'' என்றேன். அவர் சில வரிகள் படித்து நிறுத்தினார்.

''அம்மாவுக்கு கிரந்த எழுத்து நன்றாகப் படிக்கவும் எழுதவும் தெரியும்'' என்றாள் விஜயா.

''நிஜமாகவா?'' என்று நான் ஆச்சர்யத்துடன் அவளைப் பார்த்தேன். 'எம்.எஸ். அம்மா பற்றி தெரிந்து கொள்ள வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறது போலிருக்கே' என்று தோன்றியது ''எப்போது கற்றுக் கொண்டாள்?''

''எப்போது, யாரிடம் என்பதெல்லாம்

## புதிய வாசகர்களுக்கு...

* இது இரண்டாம் பகுதி. ஏற்கெனவே 22 வாரங்கள் எழுதியிருக்கிறேன்.
* வாழ்க்கை வரலாறு அல்ல. சில பிரபலங்களுடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் கிட்டியதால் அவர்கள் தொடர்பான சம்பவங்களின் தொகுப்பு.
* உலகை உலுக்கும் சம்பவங்கள் இல்லை எனினும் கவனத்துடன் படித்தால் சம்பந்தப்பட்ட நபர்களின் குணநலன்கள் தெரிய வரும். நம் வாழ்க்கையை நல்ல முறையில் அமைத்துக்கொள்ள உதவும். ''வாழ்க வளமுடன்'' என்கிறோமே, அது பணத்தில் இல்லை; குணத்தில் இருக்கிறது என்பது புரியும். வணக்கம்.

தெரியாது. சிறுமியாக மதுரையில் இருந்த போதே எழுதப் படிக்க பழகி இருக்கிறாள்.''

கணேச சாஸ்திரிகளுக்கு சன்மானம் செய்து அனுப்பி விட்டு, விஜயாவிடம் பேச்சைத் தொடர்ந்தேன். ''பள்ளிக்கூடம் போயிருக்காளா, அம்மா? எதுவரை படித்தாள்?''

''ஆறாவது வகுப்பு வரை. அப்போது ஒரு சமயம் வகுப்பாசிரியர் பலமாக அவள் தலையில் குட்டி விட்டார்! வலியை விட அதிகமாக அம்மாவுக்கு பயம் உண்டாகி விட்டது. அதன் விளைவாகக் கக்குவான் இருமல் (whooping cough) வந்து விட்டது! குணமாக ரொம்ப நாளாயிற்று. அன்று முதல் பாட்டி (சண்முகவடிவு) 'பள்ளிக் கூடம் போக வேண்டாம்; வீட்டோடு இருந்து பாட்டுக் கற்றுக் கொண்டால் போதும்' என்று சொல்லிவிட்டாள்.''



**"பாரத ரத்னா எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி தலையில் குட்டிய அந்த வகுப்பாசிரியரைக் கை கூப்பித் தொழ வேண்டும்"**

''பாரத ரத்னா எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி தலையில் குட்டிய அந்த வகுப்பாசிரியரைக் கை கூப்பித் தொழ வேண்டும்'' என்றேன். ''நம் தேசத்துக்கு எவ்வளவு பெரிய தொண்டாற்றியிருக்கிறார்! பள்ளிக்கூடம், கல்லூரி என்று தொடர்ந்திருந்தால் அம்மாவின் வாழ்க்கை எப்படி திசை மாறிப் போயிருக்குமோ, யார் கண்டது?''

விஜயா என்னுடன் சேர்ந்து சிரித்தாள். ''அபூர்வமாக அம்மா, பழைய நினைவுகளில் ஆழ்ந்து பேசுவாள். மதுரையில் சிறுமி சுப்புலக்ஷ்மியுடன் விளையாட அடிக்கடி ஒரு சிறுவன் வருவான். யார் தெரியுமா?...''

''ரொம்ப ஆவலைத் தூண்டாதே, சீக்கிரம் சொல்லு!''

''மணி! பின்னாளில் மதுரை மணி அய்யர் என்று பிரசித்தி பெற்றவர்தான்!''

''அட! என்ன விளை யாடுவார்கள்?''

''சங்கீதம் தொடர்பான விளையாட்டுகள்தான். யார் அதிக நேரம் கார்வை நிற்கு முடியும் என்பதில் படு போட்டி!''


ராஜாஜி


கல்கி


சதா சிவம்


எம்.எஸ்.


டி.கே.சி.

''ஜெயித்தது யார்?''

''அதை அம்மா சொல்லவில்லை; நானும் கேட்கவில்லை.''

''அப்புறம்? வேறென்ன விளை யாட்டு?''

''போட்டிக்குள் ஒரு போட்டி! தம்புரா மீட்டியபடியே பாடி கார்வை யில் நிற்பார்கள்; தம்புரா மீட்டு



✱ ரா.வீழிநாதன்



✱ மதுரை மணி அய்யர்

வதை நிறுத்தி விடு வார்கள்; சற்று நேரம் சென்று மறுபடி தம்புரா மீட்டி சுருதி சேர்ந்திருக்கிறதா என்று பார்ப்பார்கள்!''

''அம்மாவுக்கு படிக்கவில்லையே, பட்டம் பெறவில்லையே என்ற வருத்தம் இருந்ததுண்டா?''

''அப்படி எண்ணிப்பார்த்து வருந்து வதற்குக் கூட அவளுக்கு நேரமிருந்த தில்லை. சங்கீத உலகில் அவள் வளர்ச்சி வேகம் அப்படி இருந்தது. மேலும், படிக்க வில்லை என்ற தாழ்வு மனப்பான்மை ஏற்படாமலிருக்க அப்பாவும் ரொம்ப முயற்சி எடுத்துக் கொண்டார்.''

''அம்மா, குட் ஷெப்பர்ட் கான் வென்டுக்கு தினசரி போய் ஆங்கிலம் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டது எனக்கு நினைவிருக்கிறது'' என்றேன்.

''ஆங்கிலம் தெரிந்த ஒருவர் டியூஷன் எடுத்தால் போதாது; ஆங்கிலத்தையே தாய் மொழியாகக் கொண்ட ஒருவர் டியூஷன் எடுக்க வேண்டும் என்பதால் அப்பா செய்த ஏற்பாடு அது. அங்கே மதர் ஜோன், மதர் பேஷன் (Passion), மதர் ஆன் என்று பல கன்னிகா ஸ்திரீகள் இருந்தார்கள். பிரிட் டனிலிருந்து வந்தவர்கள். எல்லோருக்கும் 'எம்.எஸ். ஆங்கிலம் கற்க வருகிறார்' என்பதில் ஒரே சந்தோஷம். ஆனால், மதர் சுசீலியாவுக்குத்தான் அம்மாவுக்குக் கற்றுத் தரும் வாய்ப்பு கிடைத்தது.''

''கன்னடமும் தெலுங்கும் அம்மாவுக் குத் தெரிந்திருக்குமே?''

''அர்த்தம் புரியும்; பேசவும் முடியும். ஆனால் எழுதிப் படிக்கப் பழகவில்லை. சமஸ்கிருதம் படிக் கவும் எழுதவும் கற்றுத் தர அப்பா ஒரு பண்டிதரை ஏற்பாடு செய்தார். நானும் ராதாவும் கூட அம்மா

## ''பல வருஷங்கள் வேத அத்யயனம் என்று அக்னிஹோத்ராம்

வுடன் சேர்ந்து உள்ளாவூர் ராமமூர்த்தி சாஸ்திரிகளிடம் படித்தோம்.''

''ஹிந்தி மீரா படப்பிடிப்பின்போது ஹிந்தி வகுப்பு எடுக்க வீழிநாதன் வரு வாரில்லையா? பின்னால் கல்கியில் உதவி ஆசிரியராகவே சேர்ந்து, பல ஹிந்தி நாவல் களை மொழி பெயர்த்தாரே ரா.வீழி நாதன்.''

''ஆமாம்; டயலாக் பேசினால் போதாது; அந்த பாஷையையே தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் முழுமையான ஈடுபாடு ஏற்படும் என்பது அப்பாவின் கருத்து. அதே போல்தான் சங்கீத விஷயத்திலும். தீக்ஷிதர் கிருதியைப் பாடினால் போதாது; காளிதாசனையும் ரசிக்க வேண்டும்!''

''அம்மாவுடைய விஷ்ணு சகஸ்ரநாமம்

கேட்டுவிட்டு, 'பல வருஷங்கள் வேத அத்யயனம் பண்ணினவர்கள் கூட இப்படி ஸ்பஷ்டமாக உச்சரிக்க முடியாது' என்று அக்னிஹோத்ராம் ராமானுஜ தாத்தாச் சாரியார் சொன்னதில் ஆச்சர்யமில்லை'' என்றேன்.

''அவர் சுலபமா சர்ட்டிஃபிகேட் கொடுத்துட்டார்; அதன் பின்னால் இருந்த உழைப்பு பற்றி அவருக்குத் தெரிய வாய்ப்பில்லையே'' என்றாள் விஜயா. ''ரிகார்ட் ரிலீஸ் ஆவதற்கு முன் அவரிடம் ஒப்புதல் பெற வேண்டும் என்பதில் அப்பா உறுதியாக இருந்தார்.''

''அம்மா அதற்கு முன்பே வேங்கடேச சுப்ரபாதம் ரிகார்ட் கொடுத்து விட்டாள்; அதுதான் ஆரம்பம். அப்புறம்தான் விஷ்ணு சகஸ்ரநாமம், காமாட்சி சுப்ரபாதம், காசி ராமேஸ்வரம் சுப்ரபாதம், மதுரை மீனாட்சி சுப்ரபாதம் எல்லாம் தொடர்ந்தன. கச்சேரிகள் செய்து கொண்டிருந்த அம்மாவின் வாழ்க்கையில் இது ஒரு திருப்புமுனை. எப்படி ஆரம்பித்தது இந்தப் போக்கு?''

''ஒரு சமயம் திருப்பதியில் சுப்ரபாத தரிசனத்துக்குப் போயிருந்தோம். அப்போது தான் வேங்கடேச சுப்ரபாதத்தை அம்மாவின் குரலில் பதிவு செய்ய வேண்டும் என்ற எண்ணம் அப்பாவுக்கு ஏற்பட்டது. ஆனால், தேவஸ்தானத்தில் அவர்கள் அவ்வளவாக ஆர்வம் காட்ட வில்லை. சில காலம் சென்று அப்பா மகா பெரியவாளை சந்தித்த சமயம் தன் எண்ணத்தை வெளியிட்டார். பெரியவா அருட்கரம் காட்டி, ''ராயல்டியை தேவஸ் தானத்துக்கே தந்துவிடு; அவா வேத பாடசாலை நடத்தறா; அதற்குப் பயன் படுத்திக்கட்டும்'' என்றார். பெரியவா சம்மதம் கொடுத்துவிட்டதாகத் தெரிந்த

**பண்ணினவர்கள் கூட இப்படி ஸ்பஷ்டமாக உச்சரிக்க முடியாது ராமானுஜ தாத்தாச்சாரியார் சொன்னதில் ஆச்சர்யமில்லை"**



உடனே திருப்பதி தேவஸ்தானத்திலும் பூரண ஒத்துழைப்பு கிடைச்சது. கோயிலில் சுப்ரபாதம் சொல்கிற தலைமை பட்ட ரையும் இன்னும் இருவரையும் சென் னைக்கு அனுப்பி வைத்தார்கள். அவர்கள் சுப்ரபாதம் சொல்லக் கேட்டு அம்மா கிரகித்துக்கொண்டாள்.''

**கா**ஞ்சி முனிவரின் அருளாசியுடன் எம்.எஸ். அவர்களின் குரலில் பதிவான வேங்கடேச சுப்ரபாதம், இன்று இமயம் முதல் குமரி வரை ஒலிக்கிறது. விற்பனை யில் எல்லா சாதனைகளையும் முறியடித்து திருப்பதி தேவஸ்தானத்துக்கு ராயல்டியை இன்றும் அள்ளிக் கொடுத்துக் கொண்டிருக் கிறது.

**(சந்திப்போம்)**

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

**ஆ**மாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 18.4.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருவாரூர், நாகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



## தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** மேஷராசிக்காரர்களாகிய உங்களுக்கு இந்த வருடத்தில் முதல் ஆறு மாதங்கள் நன்மையும் தீமையும் கலந்த பலன்களாக நடக்கும். பின் ஆறு மாதங்கள் ரொம்பவும் நன்றாக இருக்கும். ராசிக்கு 5ல் சஞ்சரிக்கும் சனிபகவான் குழந்தைகளைப் பற்றிய மனக் கவலையை அளித்து வருகிறான். பூர்வீகச் சொத்து விஷயத்தில் சற்று இழுபறி சூழ்நிலை உண்டாகும். ராசிக்கு 10ல் நிலவும் ராகுவும் 4ல் கேதுவும் கல்வி விஷயத்தில் மந்தமான சூழ்நிலை உண்டாக்குகின்றனர். தொழில் ரீதியில் பொருளாதாரச் சிரமம் ஏற்படும். உடல் நிலையில் சில கோளாறுகளை ஏற்படுத்தும். ராசிக்கு 5ல் நிலவும் சனி மன சஞ்சலத்தை ஏற்படுத்துவார். திருமண வாய்ப்பு காலம் கடத்தும். ராசிக்கு 10ல் நிலவும் குருவால் வேலையில் தொல்லைகள் அதிரிக்கும். நிர்பந்தம் காரணமாக வேலையைவிட்டு விலக நேரிடும். ஆதலால் சக ஊழியர்களுடன் அனுசரித்துப் போவது நல்லது. புதிய திட்டங்களைச் சற்று தள்ளிப் போடுவது நல்லது. வீடு, மனை வாங்குவதாக இருந்தால் ஆறு மாதங்கள் கழித்து வாங்குங்கள். மாணவர்கள் கல்வியில் அக்கறையுடன் படிக்கவும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் செய்பவர்களுக்கு லாபம் கிட்டும். சனி / குரு / ராகு / கேது கிரகங்களுக்கு உகந்த கிழமைகளில் தீபம் ஏற்றிவர நன்மைகள் பெருகும்.

**ரிஷபம் :** ரிஷப ராசிக்காரர்களே! உங்களுக்கு இந்த வருடத்தின் ஆரம்பமே சூப்பர். தொட்டது துலங்கும். புதிதாக வீடு / மனை வாங்கப் போகிறீர்கள். வீட்டில் சுபகாரியச் செலவுகள் உண்டாகும். புண்ணிய ஸ்தலம் செல்லக் கூடிய வாய்ப்பு ஏற்படும். குலதெய்வ வழிபாடு செய்வீர்கள். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். வராத நிலுவைகள் வந்து சேரும். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். சிலருக்கு மகப்பேறு பாக்கியம் ஏற்படும். கல்வி வளம் மேன்மை பெறும். தேர்வில் அதிக மதிப்பெண் கிட்டும். விரும்பிய துறையில் சேர்ந்து படிக்கும் யோகம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வருவாய் பெருகும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். அயல்நாட்டு வாணிபம் நல்ல பலனை அளிக்கும். கட்டடத் துறை, அச்சுத் துறை, கலைத்துறை சிறந்து விளங்கும். சமூக ஆர்வலர்களுக்குப் பாராட்டு கிட்டும். அரசியல்வாதிகளுக்குப் பொன்னான காலம் இது. பதவி, பட்டம் தேடி வரும். கலைத்துறையில் அதிர்ஷ்டக் காற்று வீசத் துவங்கும். உடல் நிலையில் கவனம் தேவை. அடுத்த ஆறு மாதங்கள் குடும்ப வாழ்வில் மிகவும் கவனத்துடன் இருப்பது நல்லது. ராகு / கேது / குரு/ சனி வழிபாடு செய்து, தீபம் ஏற்றி வர நற்பலன் அதிகரிக்கும்.



## நடக்குமென்பார்; நடக்கும்!

இந்த வருஷம் நமக்குள்ளே விரோதம் வராம நடந்துக்கனும்

# (மங்கள) விரோதி வருடப் பலன்கள்



**மிதுனம்:** மிதுன ராசிக்காரர்களே! இந்த வருடத்தின் முதல் ஆறு மாதம் சற்று சிரமம் மிகுந்து இருக்கும். யாரிடமும் வாக்குவாதம் செய்யாமல் இருப்பது நல்லது. குடும்ப வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. தொழில் துறையில் சற்று மந்தமான சூழ்நிலை நிலவும். கூட்டாளிகள் விட்டு விலகிச் செல்வார்கள். கணக்கு வழக்குகளை அவ்வப்போது சரிபார்த்துக் கொள்ளவும். உடல் ஆரோக்கியம் தொல்லை தரும். வழக்கு தாமதம் ஆகும். அரசியல் சூழ்நிலை திருப்திகரமாக இல்லை. கலைத் துறை மந்தமாக இருக்கும். வரவேண்டிய பாக்கிகள் சற்று கால தாமதம் ஆகும். வியாபாரிகள் புதிய முயற்சிகளை சற்றுத் தள்ளிப் போடுவது நல்லது. பெண்களுக்கு மன சஞ்சலம் அதிகரிக்கும். கணவன் - மனைவி விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. கைப்பொருள் மீது கவனம் தேவை. விளையாட்டு வீரர்கள் கவனத்துடன் விளையாடுவது நல்லது. இல்லையெனில் கை கால்களில் கட்டு போடும்படி ஆகும். திருமணம் ஆகாதவர்களுக்கு இந்த வருடத்தின் பிற்பகுதியில் கைகூடும். மாணவ - மாணவிகள் கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் செய்பவர்கள் அகலக் கால் வைக்க வேண்டாம். இந்த ஆண்டின் ஐப்பசி மாதத்துக்குப் பிறகு நற்பலன் உண்டாகும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர சங்கடங்கள் விலகும்.



**கடகம்:** கடக ராசி அன்பர்களே! இந்த வருடம் ஏற்றம் மிகுந்த ஆண்டாக இருக்கும். திருமணம் தடை விலகி கைகூடும். பணப் பிரச்னை தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். இல்லற வாழ்வில் இருந்து வந்த மனக் கசப்பு நீங்கும். குடும்பம் ஒன்றுபடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உயர் படிப்புக்காக மேல் நாடு செல்லும் வாய்ப்பு உருவாகும். மனத்தில் நினைக்கும் காரியம் நடக்கும். சினிமா துறையினர்க்கு நல்ல பெயர் ஏற்படும். அச்சுத் துறை, கட்டிடத் துறை, ஏற்றுமதி இறக்குமதி தொழில் செய்ய பொன்னான காலம். சமூக ஆர்வலர்களுக்கு விருது கிடைக்கும். குடும்பப் பெண்களுக்கு நற்பெயர் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். பத்திரிகைத் துறையில் உள்ளவர்களுக்கு நல்ல உயர்வு ஏற்படும். பதவி உயர்வும், ஊதிய உயர்வும் வந்து சேரும். நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் உண்டாகும். புதிய வீடு / மனை வாங்க உகந்த தருணம். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது வழிபாடு செய்து வர நலம் உண்டாகும்.



**சிம்மம்:** சிம்ம ராசி அன்பர்களே! இந்த வருடத்தின் முதல் ஆறு மாதங்கள் சற்று மோசமான பின் விளைவுகளை ஏற்படுத்தும். மனத்தில் ஒருவிதமான பயம் வாட்டி வதைக்கும். கூட்டாளிகளால் தொல்லைகள் வந்து சேரும். சந்தர்ப்ப சூழ்நிலையால் கவிழ்க்கப் பார்ப்பார்கள். உஷாராக இருந்து தப்பித்துக் கொள்ளவும். திருமண முயற்சி சற்று தள்ளிப் போகும். தேவை இல்லாத செலவுகள் அதிகரிக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். புதிய தொழில் முயற்சி பலன் தராது. கலைஞர்களுக்கு சற்று சுமாரான காலம். ஏற்றுமதி இறக்குமதி தொழில் நல்ல முன்னேற்றம் தரும். சமூக ஆர்வலர்களுக்கு நற்பெயர் கிட்டும். பெண்களுக்குத் தலைவலி அதிகரிக்கும். தேவை இல்லாத வம்புக்குப் போக வேண்டாம். அச்சுத்துறை, கல்வித் துறையினருக்கு முன்னேற்றமான காலம். கடன் தொல்லை தீரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.



**கன்னி:** கன்னி ராசி அன்பர்களே! இந்த வருடத்தின் ஆரம்பமே பொற்காலமாக இருக்கும். முயற்சிக்கும் காரியம் வெற்றி பெறும். திருமண முயற்சிகள் பலன் அளிக்கும். சொத்து, வாகனம் வாங்கும் யோகம் வந்து சேரும். கடன் தொல்லை தீரும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். குலதெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். தீராத பிரச்னைகள் தீரும். குழந்தைகள் மன மகிழ்ச்சி அடைவார்கள். செலவுகள் சுபமானதாக இருக்கும். நண்பர்கள் விலகிச் செல்வார்கள். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். சமூக ஆர்வலர்களுக்கு விருது வந்து சேரும். பெண்களுக்கு மன சந்தோஷம் அதிகரிக்கும். கலைஞர்களுக்கு ஏற்றமான காலம் இது. கட்டடத் துறை, அச்சுத்துறையினருக்கு நல்ல காலம். அரசியல்வாதிகளுக்கு வெற்றி வாகை சூடும் நேரம் இது. எழுத்தாளர்களுக்கு விருது கிட்டும். சனி / ராகு / கேது வழிபாடு செய்து வர, சங்கடங்கள் விலகி நற்பலன் அதிகரிக்கும்.

**(மற்ற ராசிக்காரர்களுக்கு அடுத்த வாரம்.)**

ஒரு பக்கக் கதை

# அவள் அப்படித்தான்



ஹனீஷ் தத்தா

அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய முரளி அதிர்ந்தான். கதவு வெறுமனே சாத்தியிருந்தது. யூனிஃபார்மைக் கூடக் கழற்றாமல், குழந்தைகள் ஹாலில் உறங்கிக் கொண்டிருந்தன.

"விஜி! விஜி!" பதில் இல்லை.

குழந்தைகள் ஏதாவது சாப்பிட்டார்களோ, என்னவோ தெரியவில்லையே!

சமையல் உள்ளில் பாத்திரங்கள் துலக்காமல் அப்படியே கிடந்தன. நறுக்கிய காய்கறித் தோல்கள், குப்பை வாரப்படாமல் கீழே அப்படியே!

முகம் கழுவ பாத்ரூமுக்குச் சென்றவன், வாஷிங்மெஷின் அருகில் குவியலாய் அழுக்குத் துணிகள் கிடப்பதைப் பார்த்தான்.

'என்ன ஆயிற்று விஜிக்கு?'

பெரியவள் ராஜியை எழுப்பி, "அம்மா எங்கே?" என்றான்.

படுக்கை அறையைக் கைகாட்டியவள், அப்படியே துவண்டு விழுந்தாள்.

நைட்டியுடன், கட்டிலில் புத்தகம் படித்தபடி இருந்த விஜியிடம், "என்ன ஆச்சு விஜி? வீடு வீடாகவே இல்லையே!"

"தினமும் ஆபீஸில் இருந்து வந்ததும், இன்னைக்கு என்ன செஞ்சு கிழிச்சேன்னு கேட்பீங்களே?"

"ஆமாம்! அதுக்கென்ன?"

"இன்னைக்கு நான் எதுவும் கிழிக்கலை!" என்றாள். நேற்றைய சண்டையில் கேட்ட கேள்விக்கு இன்று பதிலாய், என்னென்ன வீட்டில் கிழிப்பேன் என்பதை நீயே பார்த்துக் கொள் என்பதாய். ●

இது புதுசு!

**பா**சம் என்று ஒரு தொடர் கொஞ்ச காலம் முன்னால் ஒரு தொலைக்காட்சியில் ஓடிக் கொண்டிருந்தது. அதில் கதாநாயகனுக்கு ஒரு பாசமுள்ள பாட்டி. பெயர் தெய்வானை. அந்தப் பாட்டி தன் கணவர்தான் பேரனாக வந்து பிறந்திருப்பதாகக் கருதுகிறாளாம். இப்படி ஒரு நியாயத்தை முன்னிறுத்தி பேரன் தன் பாட்டியை தெய்வானை என்று பெயர் சொல்லிக் கூப்பிடுவதாகக் காண்பித்தார்கள்.

# போடா அப்பா... வாடி அம்மா!

எல்லாப் பேரன் பேத்திகளும் இதே கண்ணோட்டத்தில் தங்கள் தாத்தா பாட்டியைப் பெயர் சொல்லிக் கூப்பிட முற்பட்டால் என்ன ஆகும்? தாத்தா பாட்டிகளுக்குத் தற்போது கிடைத்து வரும் சொற்ப கௌரவமும் மலையேறிவிடும்.

பெரியவர்கள் விரும்புவதெல்லாம் இளையவர்கள் பெரிய பெரிய உதவிகள் செய்ய வேண்டும் என்பதை அல்ல. இளையவர்களிடமிருந்து கொஞ்சம் மரியாதையையும் சற்று அன்பையும்தான்!

அது இப்போது ஓரளவு கிட்டி வருகிறது. அப்படிக் கிட்டி வரும் கொஞ்ச நஞ்ச மதிப்புக்கும் சின்னத்திரை வேட்டு வைக்கிறது. பாட்டியைப் பெயர் சொல்லிக் கூப்பிடும் இத்தகைய காட்சிகளைப் பார்க்கும் வருங்கால சமுதாயம் பெரியவர்களை எப்படி நடத்தும்? பெயர் சொல்லிக் கூப்பிடுவதோடு நிற்குமா அது? இன்னும் கொஞ்சம் மேலே போய், 'வாடா', 'போடா', 'வாடி', 'போடி' என்றெல்லாம் கூப்பிடத் தொடங்கும்.

அதுசரி. 'இதெல்லாம் மிகைப்படுத்தப்பட்ட கூற்று, அப்படியெல்லாம் வாடா போடா என்று கூடக் கூப்பிடுவார்களா என்ன?' என்று நீங்கள் கேட்டால்... அடடா, சின்னத்திரையில் அப்படிக் கூப்பிட்டே விட்டார்கள்!




சஹானா தொடரில்...

'சஹானா' என்று ஒரு தொடர். சிந்துபைரவியின் இரண்டாம் பாகம். தொடர் சிறப்பாக எடுக்கப்பட்டிருந்தது. அதனால் பலரும் விரும்பிப் பார்த்தார்கள். ஆனால் அப்படிப் பலரும் பார்த்த தொடரில், கதாநாயகி சஹானா தன் அப்பாவை 'வாடா', 'போடா' என்று பேசி வந்தாள்!

**வாரம் ஒரு எழுத்தாளர் பங்கேற்கும் ஸ்டெடி சிந்தனையின் சூப்பர்ஃபாஸ்ட் பக்கங்கள்!**

அப்பாவும் அவளும் அவ்வளவு நண்பர்களாம்.

நட்பும் தோழமையும் இருந்தால் வார்த்தையில் மரியாதை இருக்கக் கூடாது என்று எந்தச் சட்டத்தின் எந்த ஷரத்தில் சொல்லியிருக்கிறது? நண்பர்கள் ஒன்றாகச் சேர்ந்து மது அருந்தும் காட்சிகள் இப்போது பல திரைப்படங்களில் வருகின்றன. அப்பாவும் மகனும் நண்பர்களாகப் பழகுவதால் ஒன்றாகச் சேர்ந்து மது அருந்துவதாக அடுத்த கட்ட வளர்ச்சிக் காட்சிகளும் இனி இடம் பெறுமா?

இடம் பெறுமாவா?! இடம் பெற்றே விட்டது. 'காதலன்' என்ற திரைப்படத்தில் கதாநாயகனான பிரபுதேவா மனத்தில் இருந்த காதலை, தான் தெரிந்து கொள்ள அந்தக் கதாபாத்திரத்தின் தந்தையே மதுவை மகனுக்கு ஊற்றிக் கொடுப்பதாகக் காட்சியை அமைத்திருந்தார்கள். எப்பேர்ப்பட்ட லட்சியத் தந்தை! எப்பேர்ப்பட்ட லட்சிய மகன்!

* திருப்பூர் கிருஷ்ணன்



## பாட்டியைப் பெயர் சொல்லிக் கூப்பிடும் இத்தகைய காட்சியைப் பார்க்கும் வருங்கால சமுதாயம் பெரியவர்களை எப்படி நடத்தும்?

**டா**ஸ்மாக் கடைகளுக்கு இளைஞர்களை வேலைக்கு எடுத்தது அரசாங்கம். வேலை கிடைத்த சில இளைஞர்களின் தாய்மார்கள், 'மதுக்கடையில் என் பையன் வேலைக்குச் சேர வேண்டாம், அப்படி வரும் பணம் என் குடும்பத்துக்கு வேண்டாம்' என்று பேட்டி கொடுத்து பிள்ளைகளை வேலைக்குச் சேரத் தடை விதித்தார்கள். இன்னும் சமுதாயத்தில் உயர்ந்த கலாசாரங்களுக்கு மதிப்பு இருக்கத்தான் செய்கிறது.

ராஜாஜி மதுவிலக்கைப் பிரசாரம் செய்வதற்காக என்றே 'விமோசனம்' என்று ஒரு பத்திரிகை நடத்தினார். இன்று சினிமா ஊடகம் மது அருந்துவதற்கான பிரசாரமாகவே மாறிவருகிறது!

**ந**ல்ல விஷயங்களைச் சமுதாயத்தில் நிர்மாணிக்க

* போழகன் படத்தில்...



**திருப்பூர் கிருஷ்ணன்**

எத்தனையோ ஆண்டுகள் ஆகின்றன. அவற்றைப் போட்டு உடைத்து சமுதாயத்தை நாசப்படுத்த ஒரு கணம் போதும். பொழுதுபோக்காகப் படம் எடுங்கள்... தப்பில்லை. 'காதலிக்க நேரமில்லை', 'தேன்மழை', 'தில்லு முல்லு' என்று எத்தனை நகைச்சுவைப் படங்கள் வந்தன! அவற்றால் சமுதாயத்துக்கு எந்தக் கேடும் இல்லை. மக்கள் சிரித்து மகிழ்ந்தார்கள்.

'பேரழகன்' என்று ஒரு படம். அந்தப் படத்தில் கதாநாயகன் ஊனமுற்றவன். பல காட்சிகளில் பிற பாத்திரங்களால் அவன் கிண்டல் செய்யப்படுகிறான். என் ஊனமுற்ற நண்பர் ஒருவர் அந்தப் படத்தைப் பார்த்து அடைந்த மன வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. அவர் கண்ணீரைக் கண்டு என் கண்கள் கசிந்தன.


* மொழி படத்தில்...

நாம் நாகரிகமான சமுதாயத்தில்தானே வாழ்கிறோம்? ஊனமுற்றவர்களைக் கிண்டல் செய்வதற்கு யார் உரிமை கொடுத்தது? ஊனமாகப் பிறந்ததிலோ விபத்தில் ஊனம் அடைந்ததிலோ அவர்களின் தவறென்ன?

'கோஷிஷ்' என்று இந்தியில் ஒரு திரைப்படம் வந்தது. வாய்பேசாதவர்களைப் பற்றிய படம். வாய்பேச இயலாதவர்களைப் பார்க்கும்போதெல்லாம் அவர்கள் மேல் மரியாதை வருகிற மாதிரி படம் எடுக்கப்பட்டிருந்தது. அதைத் தமிழிலும் 'உயர்ந்தவர்கள்' என்ற தலைப்பில் படமாக்கினார்கள். ஏன், அண்மையில் ஜோதிகா வாய்பேச இயலாத பாத்திரத்தில் கதாநாயகியாக நடித்து 'மொழி' என்ற படம் வந்ததே? அந்தப் படம் என்ன அழகாக எடுக்கப்பட்டிருந்தது! ஒரு சிலரால் இப்படிப் படம் எடுக்க முடிகிறபோது, பேரழகனை மட்டும் ஏன் நாகரிகக் குறைவான வசனங்களோடு எடுக்க வேண்டும்?

ஏறக்குறைய தொண்ணூற்று ஒன்பது சதவிகிதத் தொலைக்காட்சித் தொடர்களைப் பற்றி ஒரு கேள்வி: 'பழிவாங்குதல்' என்பதைத் தவிர இவர்களுக்கு வேறு கருப்பொருளே கிடைக்காதா? கண்டிக்கப்பட வேண்டியது பாலியல் ஆபாசம் மட்டுமல்ல. இத்தகைய மனக்கோளாறான காட்சிகளும் தான்.

வீட்டுக்குள் வரும் சின்னத்திரையும் அந்தச் சின்னத் திரை மூலமாக வீட்டுக்குள்ளேயே வந்துவிடும் பெரிய திரைப் படங்களும், மாபெரும் கலாசாரச் சீரழிவை மெல்ல மெல்ல உருவாக்கத் தொடங்கியுள்ளன. இந்தச் சீரழிவின் பாதிப்பு இன்னும் பத்திருபது ஆண்டுகளுக்குள் சமுதாயத்தில் பிரதிபலிக்கத் தொடங்கும். பழிவாங்கலும், வன்முறைக் கலாசாரமும், பண்பாட்டுக் குறைவான பேச்சுகளும் நாட்டில் மலியும். மிகத் தாமதமாக நாம் வருத்தப்பட்டுப் பயனில்லை. இப்போதே விழித்துக்கொண்டால் நல்லது.

# டாக்டருக்கு சிபாரிசு!



"உடம்பை நல்லா பார்த்துக்குங்க..."

"ஒரு நல்ல டாக்டரா நீங்களே சொல்லுங்க டாக்டர்!"

- அ. கஹைறல் ரஹ்மான், திருச்சி-21



"படத்துல இடைவேளைக்கு முன்னே நீங்க வர்றவரைக்கும் படம் ஜாலியா போகுது..."

"அதுக்கப்புறம்...?"

"படம் கேலியா போகுது..."

- கே.ஆனந்தன், தர்மபுரி.



"நீ சீரியல் பார்த்து அழும்போது உன் கணவர் எதுக்கு கண்ணைத் துடைக்க வர்றார்?"

"அது வெறும் கண்துடைப்பு!"

- அம்பை தேவா, திருநெல்வேலி

கோபாலசாமி முதலியார் நல்ல சங்கீத ரஸிகர். அதோடு பவானியின் பாட்டைக் குறித்து அவருக்கு ரொம்பப் பெருமையும் இருந்தது. என்னிடம் ஒரு சமயம் அவர் சொன்னது நன்றாய் ஞாபக மிருக்கிறது; 'பவானியை மற்ற மனிதர் களைப் படைத்ததுபோல் பிரம்மா படைக்கவில்லை; கல்யாணியையும், மோகனத்தையும், செஞ்சுருட்டியையும் சேர்த்துப் படைத்திருக்கிறார்! நீர் வேண்டுமானால், பாரும்! பவானி செத்துப் போகும் போது, அவளுடைய உடம்பு அப் படியே கரைந்து உருகி ராகங்களாகப் போய்விடும்!' என்று கோபாலசாமி முதலியார் சொன்னபோது, 'இருக்க லாம்; ஆனால் அதை நீங்களும் நானும் பார்க்க மாட்டோம். நமக்குப் பிறகு பவானி ரொம்ப காலம் பாடிக் கொண் டிருக்கும்' என்றேன். ஆனால், வருங் காலத்தையறியும் சக்தியை, பகவான் நமக்குக் கொடுக்கவில்லையே? கொடுத் திருந்தால் உலகத்திலே துன்பம் ஏது? இன்பந்தான் ஏது?

# அதிசய மாறுதல்

ஆமாம்; பவானியின் சங்கீதத் தைப் பற்றியல்லவா சொல்லிக்



கொண்டு வந்தேன்? அவளுடைய சங்கீதம் மேலும் மேலும் பிரமாத மாகிக் கொண்டுதான் வந்தது. ஆனால், என்னுடைய பழகிய காதுக்கு அதில் என்னவெல்லாமோ அதிசயமான மாறுதல்கள் தோன்றின. ஒரு கச்சேரியைப் போல் இன்னொரு கச்சேரி இராது. ஒரு நாள் அவளுடைய பாட்டில் குதூகலம் பொங்கித் ததும்பும். காலை வேளையில் உதய சூரியனை வரவேற்கும் புள்ளினங்களின் குரலிலுள்ள ஆனந்தமும், பௌர்ணமியன்று வெண்ணிலவைக் கண்டு பொங்கும் கடலின் ஆரவார உற்சாகமும் தொனிக்கும். இன்னொரு நாள் கச்சேரியிலோ, அவளுடைய பாட்டைக் கேட்கும்போது உள்ளமானது காரணந் தெரியாத சோகத்தை அடையும். தாயைப் பிரிந்த குழந்தையின் தீனக் குரலையும், பகவானைப் பிரிந்த பக்தனின் தாபக் கதறலையும் அவளுடைய பாட்டிலே கேட்பதுபோல் இருக்கும். அவள் வீணை வாசிக்கும்போது, கையிலுள்ள வாத்தியத்தின் கம்பிகளைத்தான் மீட்டுகிறாளா, அல்லது கேட்பவர்களின் இருதய வீணையின் கம்பியைத்தான் மீட்டுகிறாளா என்ற சந்தேகம் தோன்றும்.

– 'வீணை பவானி'
நெடுங்கதையில்...



அமரர் கல்கி

சென்ற இதழ் தொடர்ச்சி...

**அமைச்சர்:** அடிகளாரே! அரசரின் உட்கிடக்கையை மாற்றுதற்கு, சில அரசியல் நிகழ்வுகளை அரங்கேற்ற வேண்டியதாக இருக்கிறது. அதற்குத் தங்களின் ஆசிகள் வேண்டும்.

**அடிகளார்:** அமைச்சரே! இந்த வேலவன் குன்றத்தின் ஆலயமணியின் ஓசை

# ஓசை சங்கிலி!

பாண்டிநாட்டின் திசைகளில் சென்று சேரும் எல்லை வரை, எந்தப் பாவகாரியமும் நடந்து விடக்கூடாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். தமிழ்க் கடவுள் தனது வெண்கல மணி ஓசையினால் நீதியை நிலைபெறச் செய்திருக்கும் பகுதி இது. இந்த நினைவகற்றாதீர்.

3

காட்சி - 4

*(கூகையாரின் இருப்பிடம். அமைச்சரும் கூகையாரும் அமர்ந்து பேசிக் கொண்டிருக்க, பக்கத்தில் முல்லையார் நின்று கொண்டிருக்கிறார்.)*

**கூகையார்:** அமைச்சரே! எனது அணியைச் சேர்ந்த பொற்கொல்லன் ஒருவன் இலவத்தில் சோழ நாட்டின் வணிகனொருவன் தங்கியுள்ளான். அவன் விற்பனைக்குக் கொண்டு வந்துள்ள 'சிலம்பு' மகாராணியின் சிலம்பை விடத் தரத்தில் உயர்ந்தது.

*(அமைச்சர் எழுந்து நின்று குறுக்கும் நெடுக்கும் நடக்கிறார்.)*

**அமைச்சர்:** சோழநாட்டின் விருந்தாளியைப் பற்றிச் சொல்லுங்கள்.

**முல்லையூரார்:** வந்திருப்பவன் பெயர் கோவலன். புகார் நகரப் பெரு வணிகத் தலைவர் மாசாத்துவன் மகன்.

**அமைச்சர்:** மக்கள் செல்வாக்கு உள்ள




வனா?

**முல்லையூரார்:** ஆம் அமைச்சரே! கோவலன் புகார் நகரை விட்டு நீங்கியபோது, தசரத குமாரன் காட்டுக்குப் போன போது அயோத்தி மக்கள் துயரப்பட்டது போல் புகார் நகர மக்கள் கலங்கினார்கள் என்று எனது ஒற்றர்கள் மூலம் வந்த தகவல்கள் உறுதிப்படுத்துகின்றன.

**அமைச்சர்:** கோவலனுக்குத் தீங்கு ஏதும் நேரிட்டால், சோழநாடு, பாண்டிய நாட்டின் மீது பகை பாராட்டுமா?

**கூகையார்:** நிச்சயமாக. சோழன் எதிர் வினையாற்றுமளவு கோவலன் ஓர் முக்கியப் புள்ளிதான்.

**அமைச்சர்:** நல்லது. வெளிப் பகையொன்றைத் தருவித்த பின்பு தான் நாம் நமது கலவரங்களையும் கவிழ்ப்பு வேலைகளையும் அரங்கேற்ற முடியும். அதன் பிறகு நாம் சோழனிடம் சமரச உடன்படிக்கை செய்து கொள்ளலாம். கூகையாரே சில நூற்றாண்டுகள் பழைமையானதைப் போல் ஓலைச் சுவடியைத் தயாரிக்க முடியுமா?

*(கூகையார் முல்லையூராரைப் பார்க்கிறார்).*

**முல்லையூரார்:** அது ஒன்றும் சிரமமான வேலை அல்ல. ஓலைச் சுவடியை ஒரு நாழிகை தேனீ வளர்ப்புப் பெட்டகத்தில் வைத்திருந்து, பின்பு மஞ்சள் கரைத்த நீரில் ஊற வைத்து, அதன் பின்பு ஒரு நாழிகை ஆற்று மணலில் புதைத்து எடுத்தால் ஓலைச் சுவடிக்கு அறுபது வயது ஆகிவிடும். அதன் பிறகு பற்றிக் கொள்ளாத அனல் சூடு அதன் வயதை இன்னும் அதிகமாக்கி விடும்.

**அமைச்சர்:** உம்! நான் சொல்வதை எழுதிக் கொள்ளுங்கள்.

வானவன் வியக்கும் வண்ணம் வையத்தில் செல்வம் கொண்டோன்
மீனவர் தேசம் வந்தான் சிலம்பொன்று கையில் ஏந்தி
ஏனவன் வந்தானென்று ஊழ்வினை வரையும் கேள்வி.

தேவைன் உயிர்த்துளி இனியன்றோ மதுரை ஆளும். எழுதிக் கொண்டீரா?

**முல்லையூரார்:** எழுதி விட்டேன் அமைச்சரே!

**அமைச்சர்:** இதை இன்னும் கொஞ்சம் பழைமை யான மொழி நடையில் ஏதா வது நம்பிக்கையான புலவரை விட்டு எழுத வைத்து, நீங்கள் தயாரிக்கும் நூற்றாண்டுகள் பழைமையான ஓலைச் சுவடி யில் பதிப்பித்து நாளை காலைக்குள் கொண்டு வாருங் கள்... பாடலில் இடையில் இந்த ஆண்டையும் இந்தத் திங்களையும் குறிப்பிடும் சொற்கள் சேர்ந்தால், கூடுதல் நலம்... நான் உடனே புறப் பட்டு ராணியின் சிலம்பு களவாடப்படுவதற்கு ஏற்பாடு கள் செய்தாக வேண்டும். வரட்டுமா...

**முல்லையூரார் :** அமைச்ச ருக்கு, அனைத்துத் தொழில் முனைவோரும் நண்பர்கள் போலும்.

*(அமைச்சர் முல்லை யூராரை முறைத்துப் பார்த்து விட்டுப் புறப்படுகிறார்.)*

**காட்சி - 5**

இடம் : அடிகளாரின் ஆசிரமம்

*(அடிகளார் எழுதி முடித்த திருமுகத்தை ஒரு முறை படிக்கிறார்.)*

அமைச்சரே தங்களுடன் உரையாடிய தருணத்தில் வேலவன் குன்றத்தின் ஆலய மணியின் ஓசை நிதியின் ஓசை என்று குறிப்பிட்டேன் அல்லவா? அதன் தொடர்ச்சியாக எனக்கு ஓர் எண்ணம் உதித்தது. வேலவன் குன்ற மணியோசை பரவும் திசை களில் பயணித்து, சப்தத் துளிகள் சன்னமாகக் கரைகின்ற எல்லையில் இதே போன்று மணி நிர்மாணிக்க வேண்டும். அப்படி தொடர்ச்சியாக மணிகள் அமைந்து விட்டால், பாண்டிநாடு முழுவதும் ஓசை சங்கிலி ஒன்று அந்தரத்தில் கட்டப்படும். அந்த ஓசைப் பரவலில் தேசம் உண்மையின் ஒளியைத் தரிசிக்கலாம். அதற்காக இன்று பயணிக்கிறேன்.

மணிகள் நிறுவுவதற் கான பெருஞ் செலவுக்கு அரசு ஆவன செய் யவே இந்த மடல்.




*(அடிகளார் முடங் கலைப் படித்து முடித்து, மூங்கில் குழாயில் இட்டு அரக்கு வைத்து அடைத்து விட்டுப் பணியாளரை அழைத்து, 'இந்தத் திருமுகத்தை அமைச் சரிடம் சேர்ப்பித்துவிடுங் கள்' என்று சொல்லி விட்டு, வெளியே வந்து பல்லக்கில் ஏறுகிறார். பல்லக்கு புறப்படுகிறது)*

**காட்சி - 6**

*(கோப்பெருந்தேவியின் தந்தையார் படுக்கையில் படுத்தபடியே, கட்டிலின் விளிம்பில் பொருத்தப் பட்டுள்ள விளக்கின் ஒளியில் சுவடியை மீண்டும் மீண்டும் படிக்கிறார்.)*

**அமைச்சர்:** இந்தப் பாடலின் வரிகள் தங்களுக்குப் புரிகின்றன அல்லவா? இந்தத் தென்னவன் திருநாட்டை எதிர்காலத்தில் ஆளப்போவது தங்கள் அருந்தவப் புதல்வியின் திருவயிற்றில் உதிக்கப் போகும் புதல்வன் அல்லவாம். வணிகக் குலத்தில் உதிக்கப் போகின்றவ

னாம். நிமித்திகத்தை நிறைவேறவிடாமல் செய்வதற்கு நீங்கள் செய்ய வேண்டியதைச் செய்யுங்கள். நானும் ஆக வேண்டியதைப் பார்க்கிறேன். நான் விடைபெறுகிறேன்.

*(தேவியின் தந்தை தலையசைக்க அமைச்சர் வெளியேறுகிறார்.)*

**காட்சி - 7**

*(பொட்டல் காடு. பாண்டியரின் மீனவக் கொடி பறக்கிறது. பல்லக்கின் அருகில் நிற்கும் அடிகளாரிடம் காவலாளிகள்...)*

**காவலர்:** சுவாமி அதோ தெரிகிறது அதுதான் கொலைக் களம். அங்கேதான் மணியோசையின் எல்லை முடிகிறது.

*(அடிகளார் ஆழ்ந்த சிந்தனையுடன் தலையாட்டும் போது, கொலைக்களத்தின் திசையிலிருந்து ஒரு புதரின் பின்பக்கமிருந்து ஒருவன் தள்ளாடிக் கொண்டே வருகிறான். அடிகளாரைப் பார்த்து வருகிறான்.)*



- ஜி. லட்சுமிபதி, சென்னை-88

**வந்தவன்:** சுவாமி! உங்களையும் கொலை பண்ண இழுத்துட்டு வந்துட்டானுங்களா இந்தப் பாடு பாவிங்க. உங்க மேல என்ன குற்றம் சுமத்துனானுங்க...?

**காவலாளி:** குடிகாரன் உளறுகிறான். அடேய் விலகிப்போ!

**வந்தவன்:** இந்த நாட்டில் எல்லோரும் குடிகாரனுங்கதான். நான் பட்டப்பகல்ல... கள்ளைக் குடிக்கிறேன்... இந்த இருக்கப்பட்ட சீமானுங்க ராத்திரி ஆச்சுன்னா யவனநாட்டு மதுவைக் குடிக்கிறானுங்க... தேசபக்தி இல்லாதவங்க.

*(காவலாளிகள் வந்தவனைத் துரத்த முயல, அடிகளார் அவர்களை அமைதிப்படுத்தி விட்டு வந்தவனை அருகே அழைக்கிறார்.)*

**அடிகளார்:** அப்பனே! இப்படி அருகே வா! ஏன் இப்படிக் கலங்கிய கண்களுடனும், அதிரும் உடல் துடிப்புடனும் இருக்கிறாய்... என்ன நேர்ந்தது?

*(இப்பொழுது வந்தவன் ஓங்கிப் பெருங்குரலெடுத்து அழுகிறான். அடிகளார் ஆதரவுடன் அவன் முதுகைத் தடவுகிறார். அவன் அழுகை நிற்கிறது. அடிகளாரின் கால் தொட்டு எழுகிறான்.)*

**வந்தவர்:** சாமி என் பேரு காளான்... சாமி...

**அடிகளார்:** காளான்... நல்ல பெயர்... வேண்டாத பயிரல்ல... மூலிகையாகவும் பயன்படும் தாவரத்தின் பெயர் தான்.

**காளான்:** ஆமாம்... சாமி எங்க ஆயா கூட அப்படித்தான் சொல்லிச்சு...

**அடிகளார்:** ஆயா...?

**காளான்:** ஆமாம் சாமி... ஊர் ஊரா போய்ப் பாட்டு பாடுமே... நெத்தியெல்லாம் துண்ணூறு பூசிக்கிட்டு... உங்க சன்னிதானத்தில் கூட வந்து பாடியிருக்குது எங்க ஆயா.

*(அடிகளார் காளானை உற்று நோக்குகிறார். புன்னகைத்து காளானை அணைத்துக் கொள்கிறார்.)*

**அடிகளார்:** ஓ! ஔவையின் பேரனா நீ...

**காளான்:** ஆமாம் சாமி... அந்தப் படுபாவி நான்தான்.

**அடிகளார்:** அப்பனே ஏன் சலிப்புடன் பேசுகிறாய்?

**காளான்:** பின்ன என்ன சாமி... எழுத்துக் கருவி புடிக்கிறவனெல்லாம் எங்க ஆயா நடந்துபோன மண்ணைத் தொட்டுக் கும்பிடுகிறான். நான் கொலைக் கருவியை கையில் பிடிச்சப்புட்டடன்.

*(அடிகளாரின் கை*




*தானாக காளானின் தோளிலிருந்து விலகுகிறது)*

பாத்தீங்களா சாமி... நான் யாருன்னு தெரிஞ்சதும் உங்க கை கூட என்னைத் தொடக் கூசுது... இன்னிக்கு *(தன் கைகளைத் தூக்கிக் காட்டுகிறான்)* என் கைகள் செஞ்ச காரியத்தைக் கேட்டீங்கன்னா என்னைப் பாக்கவே கூசுவீங்க சாமி.

**அடிகளார்:** அப்படி என்ன படுபாதகச் செயலை உன் கரங்கள் செய்தன?

**காளான்:** சத்தியத்தைக் கொலை செஞ்சுட்டடன் சாமி...

அவன் அழகன் சாமி... அழகன்... மகாராணியோட சிலம்பைத் திருடிட்டான்னு இழுத்துட்டு வந்தாங்க சாமி... சத்தியமா சொல்றன் சாமி... அவன் திருடியிருக்க மாட்டான். படிக்காத எனக்குத் தெரியுது. படிச்ச அதிகாரிங்களுக்குத் தெரியலையே.. அவனை வெட்டச் சொல்லி என் கையில கத்தியைத் திணிச்சுட்டானுங்களே... அவன் உன்னை மாதிரியே அழகன் சாமி... என்ன உனக்குத் தாடி இருக்குது. அவனுக்கு இல்லை. உனக்கு நெத்தியில் நீறு இருக்குது அவனுக்கு இல்லை... உனக்கு முகத்தில் சுருக்கம் இருக்குது. அவனுக்கு இல்லை. ஆனா உன் கண்ல இருக்குற வெளிச்சம் அவன் கண்லயும் இருந்தது சாமி... உன் உதட்டுல இருக்குற மாறாத சிரிப்பு, அவன் உதட்டிலயும் இருந்தது சாமி. உன் முகத்தில பொங்குற கருணை அவன் முகத்திலயும் பொங்குச்சு சாமி... சாமி... அவன் அழகன் சாமி... அழகுன்னா என்ன சாமி... சத்தியம்தானே சாமி... நான் கூட இந்தக் கத்தி புடிக்கிற தொழிலுக்கு வர்றதுக்கு முன்னால அழகாத்தான் இருந்தேன் சாமி. மலர்க்கொடி அந்த அழகைப் பாத்து மயங்கித்தான் என்னைக் கல்யாணம் கட்டிக்கிச்சு. இன்னிக்கு என் அழகெல்லாம் போயிடுச்சு சாமி... சத்தியனைக் கொலை செஞ்சுட்டடன்... எந்தப் பத்தினி தெய்வத் தோட தாலி அறுந்ததோ தெரியலையே... அவளோட சாபம் இந்த நாட்டைச் சும்மா விடுமா...?

*(அப்பொழுது ஆலய மணியின் ஓசை மிகச் சன்னமாக கேட்கிறது)*

அந்தப் பத்தினி தெய்வத்தோட தாலி அறுவதற்குக் காரணமாயிருந்த இந்தக் கையோடு, இனி எப்படி சாமி... என் மலர்க் கொடியைத் தொடுவேன்.

*(மீண்டும் மணியின் ஓசை... அடிகளார் உறைந்து நிற்க...)*

**(திரை)** ●

வாசகர் அனுபவம்




# புல்லாங்குழல் Vs வயலின்

சமீபத்தில் கல்கியில் எண்பது வயது நிரம்பிய வயலின் இசை மேதை டி.என்.கிருஷ்ணன், ''ஒரு தலைசிறந்த பக்கவாத்தியக் கலைஞரும் தன்னளவில் முழுமையானவர்தான்'' என்று கூறியதைப் படித்தேன். என் நினைவலைகள் பல வருஷங்கள் பின்னோக்கிச் சென்றன.

ஒருமுறை பம்பாய் ஷண்முகானந்தா சபாவில் டி.ஆர்.மஹாலிங்கத்தின் புல்லாங்குழல் கச்சேரி ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. டி.என். கிருஷ்ணன் வயலின். பல வருஷ இடைவேளைக்குப் பிறகு 'மாலி'யின் வேணுகானம் பம்பாயில் என்பதால், ரசிகர்கள் கூட்டம் இரண்டு மாடி உட்பட ஹால் முழுவதும் நிரம்பி வழிந்தது.

கச்சேரி ஆரம்பித்தது. ஒரு ராக ஆலாபனையின் போது குழலில் 'மாலி' வாசித்ததை, கிருஷ்ணன் வயலினில் அப்படியே திருப்பி இசைக்க, இந்த 'ஜுகல் பந்தி' போகப் போக சூடுபிடிக்க, ரசிகர்கள் மெய் மறந்து ரசித்துக் கொண்டிருந்தனர். ஒரு நிலையில் மாலி குழலில் வாசித்ததை கிருஷ்ணன் அப்படியே 'ரீப்ரொட்யூஸ்' செய்ய இயலவில்லை. அவர் வாசித்ததை மாலி ஒப்புக் கொள்ளாமல், திரும்பத் திரும்ப, தான் வாசித்ததைப் போலவே வாசிக்க வற்புறுத்தினார். கிருஷ்ணன் வயலினைக் கீழே வைத்துவிட்டு, பொறுமையாக மாலியிடமும் சபையைப் பார்த்தும் சொன்னார்: ''வாத்யங்களுக்கு அதனதற்குரிய லிமிடேஷன் உண்டு. நான் வயலினில் இசைப்பதை உங்களால் புல்லாங்குழலில் ப்ரொட்யூஸ் செய்ய முடியாது.''

மாலி அந்த சவாலை ஏற்றுக் கொண்டு, கிருஷ்ணனை முதலில் வாசிக்கச் சொன்னார். கிருஷ்ணன் சில சங்கதிகளை இசைக்க, மாலியால் அதே போல் குழலில் கொண்டு வர இயலவில்லை. கிருஷ்ணன் சாந்தமாக ஆயினும் அழுத்தமாக, ''இதுதான் நான் சொன்ன லிமிடேஷன்!'' என்றார். சபையில் ஒரே ஆரவாரம்.

அதன் பின்னர் கச்சேரி 'மங்களம்' வரை இனிமையாகவும் ரசிகர்களுக்குச் சிறந்த விருந்தாகவும் அமைந்தது. ''ஒரு தலைசிறந்த பக்கவாத்தியக் கலைஞரும் தன்னளவில் முழுமையானவர்தான்'' என்பதும் புரிந்தது.

**- கமலா வேதநாராயணன்**

**மங்களூர் பப்களில் (pub) பெண்களை அடித்து விரட்டியதன் மூலம் நாடு முழுவதும் பிரபலமாகிப் போனார் ஸ்ரீராம் சேனையின் தலைவர் பிரமோத் முதலிக். சமீபத்தில் இந்து மக்கள் கட்சியின் தலைவர் அர்ஜுன் சம்பத் அழைப்பின் பேரில் சென்னை வந்த அவரைச் சந்தித்தோம்**



# "ரெண்டு தட்டு

### ஜாதகம்

முப்பது வருடங்களாக பொது வாழ்க்கையில் இருக்கிறேன். ஆர்.எஸ்.எஸ்., பஜ்ரங்தள், விஸ்வஹிந்து பரிஷத் ஆகிய அமைப்புகளில் இருந்தேன். நான்கு வருடங்களுக்கு முன்னர் ஸ்ரீராம் சேனையைத் துவக்கினேன். எங்கள் அமைப்பில் 68,000 பேர் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். தேர்தலில் போட்டியிட ராஷ்ட்ரிய ஹிந்துஸ்தான் சேனை என்ற அரசியல் கட்சியை வைத்திருக்கிறோம். சென்ற சட்டமன்றத் தேர்தலில் 58 இடங்களில் போட்டியிட்டோம். அனைத்திலும் தோல்வியடைந்தோம். நான் தேர்தலில் போட்டியிடமாட்டேன்.

### பெண்களுக்கெதிராக சாட்டை ஏன்?

மங்களூர் பப்களில் போதை மருந்து மற்றும் பாலியல் கலாசாரங்களும் புரையோடிப் போய்விட்டன. இந்தியாவின் பல பகுதிகளுக்கு போதைப் பொருட்கள் மங்களூரிலிருந்துதான் கடத்தப்படுகின்றன. நாங்கள் எவ்வளவோ எச்சரிக்கை செய்தும் பப்கள் தங்களைத் திருத்திக் கொள்ளவில்லை. கல்லூரிக்குச் செல்ல வேண்டிய இளம் பெண்கள் கல்லூரி நேரத்திலேயே இந்த பப்களுக்குச் சென்று தங்களை அழித்துக் கொண்டிருந்தார்கள். குறிப்பிட்ட நாளன்று எங்கள் நோக்கம், பெண்களுக்குப் புத்திமதி சொல்லி வெளியே அனுப்புவதுதான். ஆனால் ஒரு பெண், எங்கள் தொண்டர்களைப் பார்த்து, 'என் பணம், நான் குடிக்கிறேன், உனக்கென்னடா?' என்றது மட்டுமல்லாமல், செருப்பைத் தூக்கிக் காண்பித்தாள். இதனால் ஆத்திரமுற்ற எங்கள் தொண்டர்கள் ரெண்டு தட்டு தட்டி அந்த இளம் பெண்ணை விரட்டினர்.



பெண்களை எந்தக் காரணம் கொண்டும் அடித்திருக்கக் கூடாது. நாங்கள் நடந்துகொண்ட விதம் தவறுதான். ஆனால், எங்கள் நோக்கம் சரியானதுதான். எங்கள் எதிர்ப்புக்குப் பிறகு கர்நாடகாவில் 72 பப்கள் மூடப்பட்டுவிட்டன. அங்கே செல்லும் பெண்களின் எண்ணிக்கையும் எண்பது சதவிகிதம் குறைந்துள்ளது. பெற்றோர்களும் பாராட்டினர்.

### ஆண்கள் விதிவிலக்கா?

ஆண்களும்தான் குடிக்கக் கூடாது. பெண்கள் ஒழுங்காக இருந்தால்தான் வீடும், நாடும் ஒழுங்காக இருக்கும் என்று நம்புகிறோம். அந்த அடிப்படையில், திசை மாறிய பெண்களை டார்கெட் செய்தோம். விரைவில் பப் கலாசாரத்தை முற்றிலும் ஒழித்து, குடிக்கு எதிராகப் போராட்டம் நடத்துவோம்.

### விளம்பர யுக்தியா?

மங்களூர் சம்பவத்தில் தொலைக் காட்சிகள் எப்படி முன்னரே அந்த பப்க்கு வந்து காத்துக் கொண்டிருந்தன என்று கேட்கிறார்கள். பப் முதலாளியை எங்கள் தொண்டர்கள் முற்றுகையிட்டபோது, காவல் துறைக்கும் மீடியாவுக்கும் தகவல் போயிருக்கிறது. மீடியாவை வரவழைத்தது நாங்களல்ல. எங்கள் அமைப்பு வரதட் சணை, பயங்கரவாதம், ஊழல் ஆகிய வற்றுக்கு எதிராகவும் போராடி வருகிறது.

### தமிழ்நாட்டுக்கு வருகிறோம்

கருணாநிதி இந்து விரோதச் செயல் களைச் செய்து வருகிறார். எங்கள் அமைப்பை இங்கே துவங்கப் போகிறோம். இலங்கையில் ஹிந்துக் களான தமிழர்கள் பாதிக்கப்படுவதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறது இந்திய அரசு. இதை ஒரு தேசியப் பிரச் னையாகக் கருத வேண்டும். தமிழர்களை அழிக்க பாகிஸ்தானும் இலங்கைக்கு உதவி செய்கிறது.

### கலாசார போலீஸ்?

இந்த வார்த்தைப் பிரயோகமே தவறு. இந்தியக் குற்றவியல் சட்டம் 53ம் பிரிவின்படி ஒரு தவறு நடக்கும் போது அதைத் தட்டிக் கேட்கும் உரிமை ஒவ்வொரு தனி மனிதனுக் கும் உண்டு. அதைத்தான் நாங்கள் மங்களூரில் செய்தோம்.

### அத்வானி நோ... நோ...

வரும் பாராளுமன்றத் தேர்தலில் எந்தக் கட்சியாக இருந்தாலும் நல்ல வர்களைத் தேர்ந்தெடுங்கள் என்று பிரசாரம் செய்கிறோம். அத்வானி என்று பாகிஸ்தான் சென்று ஜின்னாவின் கல்லறைக்குப் போனாரோ அன்றே இந்துக்களின் விரோதி ஆகிவிட்டார். அவர் பிரதமராக வரக் கூடாது. நமது நாட்டுக்குப் பொருத்தமான பிரதமர் மோடிதான்.

**- ப்ரியன்**

# ...தட்டினோம்"

- ஸ்ரீராம் சேனைத் தலைவர் பிரமோத் முதலிக்

# அருண் சரண்யா




ஸந்த சரித்ரே வாசிதாம் ஆதீ
தக்காள ஜேயீல சித்தசுத்தி ||
கதாபி ந ரோஹேத் வேஷபுத்தி
தேணேசி பவாப்தி பார ஹோய ||

- பக்த லீலாம்ருதம் என்ற நூலில் மஹிபதி மகராஜ்.

'சந்த்'களின் (சாதுக்களின்) சரித்திரங்களை ஊன்றிப் படிப்பவர்கள் அந்தக் கணமே சித்த சுத்தி அடைகிறார்கள். அவர்களிடம் ஒருபோதும் பகைமை உணர்வு தோன்றாது. அவர்களாலேயே இந்த உலக வாழ்வு எனும் கடலைக் கடக்க முடிகிறது.

''துக்காராம், சக்குபாய், நாமதேவர், ஞானேஸ்வரர், பாண்டுரங்கர், ஜனாபாய், கோராகும்பர்...''

பட்டியல் முழுமையடைவதற்கு முன்பாகவே, சட்டென பேனா நின்றது.

பாண்டுரங்கனைப் பற்றியும் அவரையே உயிர்மூச்சாய் உணர்ந்து வாழ்ந்த உத்தம பக்தர்களைப் பற்றியும் எழுத வேண்டும். அதுவும் அந்த பக்தர்கள் வாழ்ந்த இடத்துக்கு நேரடியாக விஜயம் செய்து அந்த அனுபவங்களை உங்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும். இந்த நோக்கத்தின் தொடக்கமாகத்தான் அந்த உத்தமர்களின் பட்டியலைத் தயார் செய்யத் தொடங்கினோம்.

ஆனால் எப்படியென்றே தெரியவில்லை. அந்தப் பக்தர்களின் பட்டியலில் பாண்டுரங்கனின்

அருண் சரண்யா என்ற புனைபெயர் ஏற்றுள்ள ஜி.எஸ்.சுப்ரமண்யம் பன்முகத் திறம் படைத்த பத்திரிகையாளர், எழுத்தாளர். தொடர்கதை, தொலைக்காட்சி சீரியல், பயணம், பக்தி கட்டுரை என்று வகை வகையாக எழுதி வருபவர். கடந்த முறை இவர் எழுதிய 'குருக்ஷேத்ரம்' தொடரை வாசகர்கள் இன்னமும் மகிழ்வுடன் குறிப்பிடுகிறார்கள்.



# தீராத விளையாட்டு விட்டலன்

பெயரும் இடம் பெற்றுவிட்டது. தற்செயல் என்று ஒதுக்கிவிடலாம்தான். ஆனால் அப்படி இல்லாதிருக்கவும் வாய்ப்பு உண்டு. பாண்டுரங்கன் தீராத விளையாட்டுப் பிள்ளை!

'என் பக்தர்களுக்கு நடுவே இருப்பதில்தான் எனக்குப் பேரானந்தம்' என்று அவர் சொல்லாமல் சொன்னதாகவே நமக்குப் பட்டது.

அல்லது 'என் பக்தர்களும் எனக்கு சமமானவர்கள்தான். அவர்களும் தெய்வாம்சம் பொருந்தியவர்கள்' என்பதை அடிக்கோடிட்டுக் காட்டியதாகவும் இருக்கலாம் என்று உணர்ந்தோம்.

பலவிதங்களில் சிலிர்ப்பூட்டிய அனுபவமாக அமைந்தது நமது பண்டரி பயணம். சிறு நகரங்களிலிருந்து கிராமங்கள் வரை படர்ந்த இந்த விஜயத்தில் கண்டு மகிழவும், கற்று சிலிர்க்கவும் பலப்பல தரிசனங்கள்!

புண்ணியத் தலங்களுக்குப் பஞ்சமில்லாத பூமி நம் பாரதம்.

இயற்கையைத் துதி செய்யும் குணம் கொண்டவர்கள் நாம். அதனால்தான் பஞ்சபூதங்களையும், மரங்களையும், விலங்குகளையும் வணங்கும் தன்மை நமக்குக் காலகாலமாக இருந்து வருகிறது. அந்த விதத்தில் புண்ணியத் தலங்களையும் இறைவடிவமாக நாம் எண்ணுவதுண்டு. அவற்றுள் தனி சக்தி கொண்ட தலங்கள் சிலவற்றை பரப்பிரம்ம வடிவமாகவே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

வாரணாசி எனப்படும் காசியை (உத்தரப் பிரதேசம்) தாரக பிரம்மம் என்பார்கள்.

கலிங்க நாட்டில் (ஒரிசா) உள்ள ஜகன்னாத க்ஷேத்ரமான பூரியை அன்ன பிரம்மம் என்பதுண்டு.

விஜயநகரசாம்ராஜ்யத்தில் இருந்த (ஆந்திரா) திருப்பதியை பூரண பிரம்மம் என்று குறிப்பிட்டு புளகாங்கிதப் படுவோம்.

பண்டரிபுரம்? மகாராட்டிரத்தில் உள்ள இத்தலத்தின் பெயரைக் குறிப்பிடும் போதே (அங்கே பந்தர்பூர் என்கிறார்கள்) காதுகளில் ஜால்ரா, சிப்ளாக்கட்டை, ஏக்தார் (ஒரே தந்தி கொண்ட தம்புரா) ஆகிய இசைக் கருவி






பஜனை மூலம் இறைவனை அடையலாம் என்பது யுகயுகமாகவே தெளிவாக்கப்பட்ட விஷயம்தான்

களின் சுநாதம் நம் காதுகளைச் சுண்டி யிழுக்கும். மனத்தைப் பரவசப்படுத்தும். ஆம்... நாமசங்கீர்த்தனம் (பஜனை) மூலமாகவே இறைவனை அடைய முடியும் என்பதை அழுத்தமாக உணர்த்தும் தலம் பண்டரிபுரம்.

பஜனை மூலம் இறைவனை அடைய லாம் என்பது யுகயுகமாகவே தெளிவாக் கப்பட்ட விஷயம்தான். க்ருத யுகத்தில் பிரகலாதன், த்ரேதா யுகத்தில் அனுமன், த்வாபர யுகத்தில் கோபிகைகள் ஆகியோர் இப்படித்தான் இறைவனுடன் ஒன்றி ணைந்தனர்.

'**ச**ந்த்' எனப்படும் பரவச பக்த மகான்களை இணைப்பது எது? பாண்டு ரங்கன், விட்டோபா, பண்டரீநாதன் என்றெல்லாம் அழைக்கப்படும் விட்ட லனிடம் அவர்கள் கொண்ட பக்தியா? உண்மை. ஆனால் மற்றொரு அதிசய இணைப்பும் உண்டு.

அதைப் பார்ப்பதற்கு முன் ஆராதிக் கப்படும், சமாதிகள் எழுப்பி வணங்கப் படும் இந்த 'சந்த்'கள் எத்தகைய பின்னணி யைச் சேர்ந்தவர்கள் என்பதை அறி வோமா? அவர்கள் யார்?

பண்டிதர்களா? பாமரர்களா? பரம் பரைச் செல்வந்தர்களா? பரம தரித்திரர் களா? உயர்குலம் என்று கருதப்பட்ட பிரி வைச் சேர்ந்தவர்களா? அப்படி அல்லா தோரா? ஆண்களா? பெண்களா?

அத்தனை கேள்விகளுக்குமே ஒரே விடைதான் உண்டு. ''ஆமாம்!'' ''ஆமாம்!''

இவர்களுக்கு விட்டலன் காட்சி அளித்தான் என்பதோடு தீர்ந்துவிட வில்லை அதிசய அற்புதம். அவர்களுடன் கைகோத்து விளையாடியிருக்கிறான். நட்புடன் உரிமை பாராட்டியிருக்கிறான். சேர்ந்து உண்டிருக்கிறான். கதை பேசி யிருக்கிறான். வேலையில் கைகொடுத்து உதவியிருக்கிறான்!

அந்த சுக அனுபவத்தினால் சந்துக் களிடமிருந்து வெளிப்பட்டவைதான் 'அபங்கம்' என்று அழைக்கப்படும் பாடல்கள். இந்த அபங்கங்களைத்தான் அவர்களை இணைக்கும் அதிசய இணைப்பு என்றோம். தோட்டக்காரரி லிருந்து அந்தணர் வரை, பாரம்பரியமிக்க குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணியி லிருந்து கணிகையர் குலத்தைச் சேர்ந்த உத்தமி வரை, காலணி தைப்பவரிலிருந்து குயவர் வரை அத்தனை பேரும் அபங்கங் களை உருவாக்கியிருக்கிறார்கள். அத்த னையும் பக்தி ஒளிரும் நல் முத்துக்கள் - பங்கம் இல்லாததுதானே அபங்கம்!

வாருங்கள் பக்தவிஜயத்தைத் தொடங் கலாம்.

சென்னையிலிருந்து ஷோலாபூர் சென்று அங்கிருந்துதான் பண்டரிபுரம் செல்ல வேண்டும். நாங்கள் மும்பை மெயிலில் கிளம்பினோம். எங்களைச் சுமந்த ரயிலை விட் டலன் நகர வைத் தான். நீங்களும் வண்டியில் ஏறி விட்டீர்கள்தானே?




சித்திரம்: வேதா
படங்கள்: ஸ்ரீஹரி




கு.அருணாசலம்,
தென்காசி

கடந்த மூன்று மாதங்களாக மாலை நேரங்களில் இயக்குநர் கே.பாலசந்தர் மிகவும் பிஸி. சினிமா சம்பந்தப்பட்ட விழாக்களில்கூட கலந்துகொள்வதைத் தவிர்த்துவிட்டார். பூ விலங்கு மோகன், ரேணுகா, சஹானா புகழ் காவ்யா, ஃபாத்திமா பாபு, பிரேம் சாய் உள்ளிட்ட எட்டு பேர் நடிக்க தன்னுடைய புத்தம் புதிய மேடை நாடகத்தின் ஒத்திகையில் வசன உச்சரிப்பு, குரல் ஏற்ற இறக்கம், நடிப்பு, உடல் மொழி என்று ஒவ்வொன்றையும் கவனித்து, திருத்தங்கள் சொல்லி, தான் ஒரு 'பர்ஃபெக்ஷனிஸ்ட்' என்று நிரூபித்துக் கொண்டிருக்கிறார். ஏப்ரல் 18ம் தேதி கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் ஆதரவில் நாடக அரங்கேற்றம். நாடகத்தின் தலைப்பு: பௌர்ணமி.



# மேடையில் பௌர்ணமி!

அதென்ன பௌர்ணமி?

''ஒரு பௌர்ணமியில் தொடங்கி அடுத்த பௌர்ணமியன்று முடிவடைகிற கதை. நாடகத்தின் முக்கிய பெண் கதாபாத்திரத்தின் பெயரும் பௌர்ணமிதான்!'' விளக்கம் தரும் கே.பி. தொடர்ந்து, ''அறுபதுகளிலும், எழுபதுகளிலும் மூன்று மணி நேரம் நாடகம் போட்டபோது கூட உட்கார்ந்து பார்த்து ரசித்தார்கள். அதே போல ஒரு மனிதனின் மொத்த வாழ்க்கையையும் மேடையில் கதையாகக் கையாள முடிந்தது. ஆனால், இன்றைய ரசிகர்களுக்கு எதையும் ரத்தினச் சுருக்கமாக சொல்ல வேண்டி இருக்கிறது. அதனால் தான் வாழ்க்கையில் நடக்கும் ஒரே ஒரு சம்பவம், அதனால் ஏற்படுகிற பல்வேறு விளைவுகள், அவற்றை மட்டுமே நான் இந்த நாடகத்துக்கு எடுத்துக் கொண்டிருக்கிறேன்'' என்கிறார்.

''பல வருடங்களாக மேடை நாடகம் தொடர்புடைய விழாக்களில் கலந்து கொண்டு பேசுகிறபோதெல்லாம், 'நாடகம் என் தாய் வீடு. மீண்டும் நாடகம் எழுதி மேடை ஏற்ற வேண்டும் என்ற ஆவல் எனக்குள்ளே இருந்து கொண்டுதான் இருக்கிறது. மீண்டும் நான் நாடகத்துக்கு வருவேன்' என்று நான் பேசியதுண்டு.

தமிழ் மேடையில் எனக்கொரு இடத்தை ஏற்படுத்திக் கொண்டு, சினிமாவுக்குச் சென்று, அங்கே பிஸியான பிறகும் நாடகத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தேன். ஆனால், ஒரு கட்டத்தில் சினிமா என் முழு நேரத்தையும் எடுத்துக்கொள்ள, நாடகத்துக்கு 'குட் பை!' சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது. நாடக ஆர்வம் மறைந்துவிடவில்லை. அதைத்தான் அவ்வப்போது மேடையில் பேசுகிறபோது வெளிப்படுத்தினேன்'' என்கிறார்.

சொல்லத்தான் நினைக்கிறேன் டி.வி. தொடருக்கான வேலைகளை கே.பி. முன்

கூட்டியே முடித்துக் கொடுத்துவிட, இப்போது நாடக அரங்கேற்றத்துக்கான வேலைகள் முழு மூச்சில் நடக்கின்றன. ''இன்று நாடகம் என்பது பணம் சம்பாதிப்பதற்கு இல்லை என்று எனக்குத் தெரியும். ஆனால், அந்த நாட்களில் நாடகம் போட்டுக் கிடைத்த ஆத்ம திருப்தியை மீண்டும் அனுபவிக்க விரும்புகிறேன். அதற்காகத்தான் 'கவிதாலயா தியேட்டர்ஸ்' ஆரம்பித்திருக்கிறேன்.

அந்தக் காலத்தில் நானே எழுதி, நடித்த ஒரு மணி நேர 'மேஜர் சந்திரகாந்த்' நாடகம், நாடகப் போட்டியில் பரிசு பெற்றது. அதை ஒரே செட்டில் நடக்கும் இரண்டு மணி நேர மேடை நாடகமாக்கி சபா ரசிகர்களுக்கு எடுத்துச் சென்றேன். அரங்கேற்றத்துக்கு முன்பு, பல்வேறு சபாக்களிலும் சென்று எங்கள் புதிய நாடகம் பற்றிச் சொல்லி, தேதி கேட்டபோது, 'அஞ்சே கேரக்டர்தானாமே? ஒரு லேடி ஆர்டிஸ்ட்கூட இல்லையாமே?' என்றெல்லாம் கேட்டுவிட்டு, 'அரங்கேற்றம் ஆகட்டும்; அப்புறமா வாங்க' என்பார்கள். ஆனால், அரங்கேற்றம் ஆனபோது, எல்லோரும் ரொம்பப் பாராட்டினார்கள்; சபாக்களில் தேதி கொடுத்தார்கள்''

பழைய நினைவுகளை ரீவைண்ட் செய்கிறார்.

''இந்த நேரத்தில் எங்கள் நாடகக் குழுவான ராகினி ரிக்ரியேஷன்ஸ் செயலாளரான நண்பர் பி.ஆர்.கோவிந்தராஜன், ஆர்ட் டைரக்டர் ரங்கண்ணா, எலெக்ட்ரிஷியன் பார்த்தசாரதி, என் இனிய நண்பன் நாகேஷ் எல்லோரையும் நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறேன். 'என்னுடைய ஏதாவது ஒரு நாடகத்தில் நீ நடித்தால், ரசிகர்கள் நாடகத்தை விட்டுவிட்டு, உன்னைப் பற்றி மட்டுமே பேசுவார்கள். அப்படி இல்லாமல், உனக்காகவே ஸ்பெஷலாக நாடகம் எழுதுகிறேன்; ரசிகர்கள் உன்னைப் பற்றியும், நாடகத்தைப் பற்றியும் பேசுவார்கள்' என்று நாகேஷிடம் சொல்லி அப்படி எழுதியவைதான் 'சர்வர் சுந்தரம்', 'எதிர் நீச்சல்' எல்லாம். என் இந்த நாடகத்தை அரங்கின் முன் வரிசையில் என் நண்பனாக உட்கார்ந்து பார்க்கக் கூட நாகேஷ் இல்லை. எனவே இந்த நாடகம் நாகேஷுக்கு என் அன்புக் காணிக்கை'' நெகிழ்வுடன் பேசுகிறார் கே.பி.

- எஸ்.சந்திரமௌலி

படங்கள் : எஸ்.பி.மோகன்



**செ**ன்ற வருடம் ஹைதராபாத் ஐ.பி.எல். அணியின் ஐகான் வீரராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார் லக்ஷ்மண். இந்தப் பதவியில் அமர்பவர்களே அணியின் அதிகபட்ச விலை கொண்ட வீரர் ஆவார். ஏலத்தில் அந்த அணி சார்பாக யார் அதிக மான விலைக்கு வாங்கப்படுகிறாரோ அவரை விடவும் ஒன்றரை மடங்கு தொகை ஐகான் வீரருக்கு வழங்கியாக வேண்டும். (இப்படியொரு விதியில் சிக்கியதால்தான் சச்சினால் இன்றுவரை அதிக விலைக்கு விலை போக முடியவில்லை). ஆனால் லக்ஷ்மண் என்ன செய்தார்? அணியின் நலனுக்காக ஐகான் வீரர் என்கிற பதவியிலிருந்து விலகினார். இதனால்தான் ஹைதராபாத் அணியில் சைமண்ட்ஸ், கிப்ஸ், கில்கிறிஸ்ட் போன்ற பெரிய தலைகள் உள்ளே நுழைய முடிந்தது. இப்போது அந்த அணியின் தலைவராக கில்கிறிஸ்ட் நியமிக்கப்பட் டிருக்கிறார். லக்ஷ்மண் ஒரு சத்தம் எழுப்பவில்லை.

**ரா**குல் டிராவிட் இந்திய அணியின் கேப்டன் பதவியிலிருந்து விலகிய கதை எல்லோருக்கும் தெரியும். இங்கிலாந்து டெஸ்ட் தொடரைக் கைப்பற்றிய பிறகு, ஒருநாள் போட்டியில் தோல்வி கண்டதால் அதற்குப் பொறுப்பேற்று தலைவர் பொறுப்பை உதறினார். இப் போது மீண்டும் இன்னொரு முறை தலைவர் பதவியிலிருந்து விலகியிருக்கிறார். பெங்களூரு அணியின் கேப்டனாக பீட்டர்சன் நியமிக்கப்பட்டுள்ளார். சிறு சிராய்ப்பும் இல்லை. ஆனால் கொல்கத்தா அணியிலோ பாத்திரங்கள் உருட்டப்படு கின்றன.

**செ**ன்ற வருட ஐ.பி.எல். போட்டியில் கொல்கத்தா நைட் ரைடர்ஸ் அணி என்ன சாதித்தது என்று எல்லோருக்கும் தெரியும். தோல்விக்குப் பொறுப்பேற்று மரியாதை யாக கங்குலி கேப்டன் பதவியிலிருந்து விலகியிருக்கவேண்டும். ஆனால் பட்டத்து அரசன் போல தனது இருக்கையிலிருந்து எழ அடம்பிடித்ததால் இப்போது அணிக்கு நான்கு கேப்டன்கள், என்கிற புதிய சித்தாந்தத்தை கிரிக்கெட் உலகுக்கு அறி முகப்படுத்தியிருக்கிறார் அந்த அணியின் பயிற்சியாளர் ஜான் புச்சனன்.



● புச்சனன், ஷாரூக், கங்குலி

'இது என் கருத்து அல்ல. இது மற்ற

வீரர்களுக்குத் தெரியாது என்று கருது கிறேன், இது வெற்றி கொடுக்குமா என் பதைக் காலம்தான் சொல்லவேண்டும்' என்று தன் அதிருப்தியை வெவ்வேறு வார்த்தைகளில் வெளிப்படுத்தியிருக்கிறார் கங்குலி. ஆனால் புச்சனனோ ''இல் லைங்க, நான் இதைப் பத்தி போன வருஷமே கங்குலிகிட்ட பேசியிருக் கிறேன்'' என்கிறார். ஆஸ்திரேலியர்கள், கண்ணில் விரலை விட்டு ஆட்டுபவர்கள். கங்குலிக்கும் ஆஸ்தி ரேலியப் பயிற்சி யாளர்களுக்கும் எப் போதும் ஆவ தில்லை. முன்பு கிரேக் சேப்பல், இப்போது ஜான் புச்சனன் என்று தொடர்ந்து ஆஸ்திரேலியப் பயிற்சியாளர்களிடம் அவர் மாட்டிக் கொண்டு முழிக்கிறார். ஐ.பி.எல். ஆரம்பிக் கும் முன்பே வாணவேடிக்கைகள் ஆரம்ப மாகிவிட்டன.

ஐ.பி.எல். போட்டிகளை இந்த வருடமும் சோனி டி.வியே ஒளிபரப்பு கிறது. பதினொரு வருடத்துக்குச் சேர்த்து அது இந்திய கிரிக்கெட் வாரியத்துக்கு 8,200 கோடி ரூபாய் தரவிருக்கிறது. சென்ற வருடம் அதிகத் தொகைக்கு, அதாவது ஆறரை கோடிக்கு விலை பேசப்பட்டவர் தோனி. ஆனால் இந்த வருடம் அதிகத் தொகை ஏழரை கோடியாக உயர்ந்து நிற்கிறது.

சென்ற வருடம் ஐ.பி.எல். போட்டி

# கொட்டப் போகுது 'கோடி' மழை!

யினால் பி.சி.சி.ஐ.க்குக் கிடைத்த மொத்த வருமானம் 645 கோடி. இதில் பி.சி.சி.ஐ. யின் லாபம் மட்டும் 51 கோடி. உலகப் பொருளாதாரம் விழுந்துவிட்ட

**ச.ந.கண்ணன்**

போதிலும் கிரிக்கெட்டில் மட்டும் பணம் ஏன்மையாகக் காய்க்கிறது பாருங் கள்! இந்த வருடக் கோடையிலும் கிரிக் கெட் வாரியத்துக்கு 'கோடி' மழை கொட் டப் போகிறது. •

# ப்ளாக் அண்ட் வொய்ட் கதைகள் –1

இது புதுசு!

# அன்பின் அடிமை!

'முளசை முற்றுகை இடப்பட்டிருக்குமோ?'

'வந்திருக்கும் சேனை யாருடையதாக இருக்கும்?'

'பாண்டியர் படையா? சோழ சைன்யமா..?'

'என்ன காரணத்துக்காக ஊரின் நாலா புறங்களிலும் சூழ்ந்து நிற்கிறார்கள்?'

இப்படிப் பலவாறாக எண்ணிப் பயந்து கொண்டிருந்தனர் முளசை கிராமத்தார்.

திருச்செங்கோட்டுக்குத் தென்மேற்கில், சற்றேறக்குறைய முக்கால் காதத் தொலைவில், காவிரியின் வட கரையில் உள்ள ஒரு பழைமையான சிற்றூர் முளசை. சிறிய ஊர் என்றாலும், கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் தென் பகுதிக்கு அது தான் தலைமை ஊர்.

எப்படியோ ஒரு செய்தி, அரசல் புரசலாகக் கசிந்து வந்து, அனைவர் காதுகளையும் தொட்டது. அது, வருவோர் மதுரைப் பக்கத்து ஆசாமிகளாம். அது உண்மையெனில், மதுரைப் படையெடுப்புதான். முளசையில் ஏதோ விபரீதம் நிகழத்தான் போகிறது என்று நினைத்த சில முக்கியஸ்தர்கள், நேரே வேலப்பன் வீட்டு வாசலில் போய் நின்றனர்.

முளசை வேலப்பன், பெரும் வேளாண் குலச் செல்வன். அந்தச் சுற்றுவட்ட ஊர்களிலேயே அவனுக்குத்தான் விளை நிலங்கள் அதிகம். அவனே ஊர்த் தலைவனும் கூட. அந்த ஊரிலுள்ள பெரும்பாலான ஆட்கள் அவனிடம் பணி புரிபவர்களே. படைத்திறனும், கொடைத் திறனும் மிக்கவன் வேலப்பன். எங்கே பூசல் மூண்டாலும், அங்கே அதைத் தடுக்க முதலில் சென்று நிற்பவன் அவனே. பெரும் புலவர்கள் பலர் அவன் இல்லம் தேடி வந்து, கவி மழை பொழிவர். பல நாள் இருந்து விருந்துண்டு, கை நிறையப் பரிசில் பெற்றுச் செல்வர்.

ஊரார் கூடி வந்து நின்று, ''பாண்டி நாட்டு மறவர்களால் பெரும் ஆபத்து நேரப் போகிறது. முளசையைச் சூறையாடத்தான் அவர்கள் பெருங்கூட்டமாக வருகிறார்கள்'' என்று கூச்சலிடுவதைக் கேட்டு, இடி இடியென நகைத்தான் வேலப்பன் என்றால், அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது.

அது, அவன் மதுரைக்குச் சென்றிருந்த போது நடந்த சம்பவம்!

சத்திரம் ஒன்றில் படுத்திருந்தான் வேலப்பன். இரவு நேரம். துணி மூட்டை ஒன்றைத் தலைக்கு அடியில் வைத்துக் கொண்டிருந்தான். அதில் வெற்றிலைப் பெட்டி ஒன்று இருந்தது. அதனுள் சில பொற்காசுகளை வைத்திருந்தான், வழிச் செலவுக்காக. எனவே, ஒரு கையால் மூட்டையை அணைத்தபடி ஒருக்களித்தவாறு எச்சரிக்கையுடன் படுத்திருந்தான்.

அப்போது ஒரு புதிய ஆசாமி வந்து சேர்ந்தான்.

வந்தவன், நல்ல கட்டுடல் கொண்ட

வாட்டசாட்டமான இளைஞன். உடைகளும் பொலிவுடன் இருந்தன. முகத்தில் புதராக மண்டிய தாடி, தலைப்பாகை, கையில் நீண்ட கழியுடன் காணப்பட்டான். பரஸ்பர அறிமுகத்துடன் இருவரும் உரையாடத் துவங்கிய



போது, அவன் தன் பெயர் வெற்றிவேலன் என்றான். இரு காதத் தொலைவிலுள்ள சிற்றூரிலிருந்து வருகிற அவன், மதுரைப் படையில் சேர எண்ணுவதாகவும், அதற்கு உதவ அரண்மனையில் தெரிந்தவர் ஒருவர் இருப்பதாகவும், இரவு சத்திரத்தில் படுத்திருந்துவிட்டு, மறுநாள் அவரைச் சந்திக்கப் போவதாகவும் கூறினான்.

இதைக் கேட்டு மகிழ்ந்த வேலப்பன், அரண்மனையில் உள்ள அந்த நண்பரைத் தனக்கும் அறிமுகம் செய்து வைக்க வேண்டினான்.

''அது ஒன்றும் பெரிய காரியமல்ல.

## கௌதம நீலாம்பரன்

நாளை உன்னை என்னுடன் அரண்மனைக்கு அழைத்துச் செல்கிறேன். அங்கே உனக்கு என்ன வேலை...? படையில் சேர நீயும் விரும்புகிறாயா அல்லது அரண்மனைப் பணியாளாக இருக்கப் போகிறாயா...?'' எனக் கேட்டான், வெற்றிவேலன்.

''இரண்டுமில்லை. ஊரில் எனக்கு நிறைய நிலபுலன்கள் உண்டு. ஆயிரம் பேருக்கு வேலை தரவோ, சாப்பாடு

போடவோ எனக்கு வசதி இருக்கும்போது நான் எதற்கு வேலை தேட வேண்டும்?'' என்றான் வேலப்பன்.

''பிறகு எதற்கு அரண்மனைக்கு வர ஆசைப்படுகிறாய்?''

''நான் எப்படியாவது இளைய பாண்டியரைக் காண வேண்டும். அவரை நேரில் கண்டு, என்னை அவருடைய நண்பனாக ஏற்குமாறு மன்றாடப் போகிறேன். இது என் இலட்சியம். இதற்கு நீங்கள் தயவு செய்து உதவ வேண்டும்...'' என்று, கெஞ்சும் குரலில் கேட்டான் வேலப்பன்.

''உன் ஆசை, இலட்சியம் எல்லாம் விசித்திரம்தான். எதற்காக இதெல்லாம்...?''

''வெற்றி வேலண்ணே, எனக்கொரு காதலி உண்டு. பூங்கொடி என்று பெயர். நல்ல அழகி, குணவதியும் கூட. என் சொந்த மாமன் மகள்தான். அவள் ஒரு சமயம் எங்கள் குடும்பத்தின் செல்வ வளத்தையும் வள்ளல் தன்மையால் எங்கள் முன்னோர் பாடல்கள் பெற்ற புகழையும் எள்ளி நகையாடி விட்டாள். 'எல்லாம் ஏழைப் புலவர்களின் பிதற்றல். பஞ்சைப் பராரிகள்தான் உங்கள் குடும்ப நண்பர்கள். இதுவரை பாராளும் வேந்தர் குடும்ப நண்பர்கள் யாருமே அமையவில்லையே, ஏன்?' என்று கேட்டு விட்டாள். அவளிடம் நான், 'பாண்டிய இளவரசர் சுந்தர பாண்டியரை என் நண்பராக்கிக் காட்டுகிறேன் பார்' என்று சூளுரைத்துவிட்டு, மதுரைக்குப் புறப்பட்டு வந்துள்ளேன்...''

''அட மூளை கெட்ட முளசை வேலப்பா! நீ எதற்கு உன் காதலியிடம் அப்படிச் சொன்னாய்...? இந்த இளைய பாண்டியன் வீரமில்லாதவன், கோழை. அண்ணன் குலசேகரனுக்கு அடங்கிக் கிடப்பவன். அந்தப் பெரிய பாண்டியனோ தொடை நடுங்கி. மூன்றாம் குலோத்துங்க சோழனுக்கு அஞ்சி முடங்கிக் கிடப்பவன். இவர்கள் நட்பால் நீ எந்தப் பெருமையும் அடைய முடியாது. பேசாமல் திரும்பிச் சென்று சோழ இளவரசன் மூன்றாம் இராஜராஜனிடம் நட்பு கொள். அதுதான் உனக்குப் பெருமை; ஆதாயமும் கூட....''

''அடப்பாவி! பிறகு எதற்கு நீ பாண்டியர் படையில் சேரவிருக்கிறாய்? உன் உள் நோக்கம்தான் என்ன...?''

''அப்படிக் கேள், சொல்கிறேன். நானோ மதுரைப் பக்கத்து ஆள். நேரே சோழ சைன்யத்தில் போய்ச் சேர முடியுமா...? இங்கு சேர்ந்தால், அங்கு உளவு சொல்லலாம்; நாலு காசு சேர்க்கலாம். சோழர் படை பாண்டிய நாட்டைத் தாக்கும் போது, சரணடைகிற மாதிரி அந்தப் பக்கம் போய்ச் சேர்ந்து விடலாம். தகுதிக்கேற்ப அங்கு பெரிய பதவிகளும் கிடைக்கும்...''

பேசி முடிக்கவில்லை, வெற்றி வேல். அவன் கன்னத்தில் பளாரென்று ஓர் அறை விழுந்தது.

''தகுதியாம் தகுதி. துரோகத்துக்கு இப்படி ஒரு பெயரா?'' கத்தியவாறு எழுந்து எதிர்நின்றான் முளசை வேலப்பன்.

ருத்ரமூர்த்தியாக நிற்கும் அவனைக் கண்டு ஒரு கணம் மிரண்டு போன வெற்றி வேல், ''பிரச்னை பண்ணாதே. என் உதவி இல்லாமல் நீ மதுரை அரண்மனைக்குள் நுழைய முடியாது. இத்தோடு விடு. நான் விளையாட்டாகத்தான் எல்லாம் சொன்னேன்'' என்றான்.

''விளையாட்டா, எது விளையாட்டு? துரோகத்தை மனத்தால் எண்ணுவதே குற்ற

### போர்க்களம்

பாங்க்காக் - திரைப்படக் கல்லூரியில் இயக்குநர் பயிற்சியை முடித்த கையோடு தமிழில் படம் இயக்க வந்திருப்பவர் பண்டி சரோஜ்குமார், வயது இருபத்துநான்கு. தனிமனிதன் ஒருவன் பல விஷய களுக்கு எதிராக நடத்துகிற போராட்டம்தான் படத்தின் கதை. வித்தியாசமான

காட்சியமைப்புகள் கொண்ட, யுனிக் ஸ்டைல் மேக்கிங் கொண்ட திரைப்படமாக உருவாக்கியிருக்கிறோம். படத்தின் நாயகன் 'கிஷோர்' (வெண்ணிலா கபடிக்குழு - பயிற்சியாளர்). அது என்ன ஸ்கிரிப்ட் ஷாட் டைரக்‌ஷன்? எனக் கேட்டதற்கு ''பொதுவாக ஸீன்-பை-ஸீனாகத்தான் ஷாட் டிவிஷன் செய்வார்கள். நான் ஷாட் - பை - ஷாட் டாக திரைக்கதையை அமைத்திருக்கிறேன்'' என்றார். படத்தின் தலைப்பு 'போர்க்களம்', சரிதான்!

– கிராபியென் ப்ளாக்



மில்லையா? வேண்டாம், நான் உன்னோடு மதுரைக் கோட்டைக்குள் நுழைய மாட்டேன். ஆரம்பமே அபசகுனமாக உள்ளது.''

வெற்றிவேல் என்ன நினைத்தானோ, ''இரு... இரு... உன்னைப் பிறகு பார்த்துக் கொள்கிறேன்'' எனக் கறுவியவாறே எழுந்து சென்று விட்டான்.

மன உளைச்சலோடு மறுபடி படுத்த முளசை வேலப்பன், நெடு நேரம் தூங்கவில்லை. ஒரு வழியாக அவன் கண் மூடித் திறக்கும் போது, பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. தலை தரையில் இருந்தது. தலையணையாய் வைத்திருந்த மூட்டையைக் காணவில்லை. 'இது அவன் வேலைதான். படுபாவி, பழிவாங்க எண்ணி, இதைத் தூக்கிப் போயிருப்பான்' என்று முணுமுணுத்தவாறே எழுந்தான்.

அவன் எதிரே இரு காவலர்கள் நீண்ட வேல் கம்புடன் வந்து நின்று,

''ஐயா, ஒரு திருடனைப் பிடித்து அரண்மனையில் ஒப்படைத்தோம். அவன் கையில் ஒரு துணி மூட்டை. அதை அவன் இந்த மண்டபத்தில் திருடியதாகச் சொல்கிறான்...'' என்றனர்.

''ஆம்; அது என் மூட்டைதான். உள்ளே பொற்காசுகள் சில வைத்திருந்தேன்...''

''சரி, எங்களுடன் வாருங்கள். அரண்மனையில் விவரம் கூறி, அதை நீங்கள் திரும்பப் பெறலாம்...''

அரண்மனையில், ஒரு பெரிய கூடம். அங்கே ஓர் உயரிய இருக்கையில் வீற்றிருந்தார், குலசேகர பாண்டியர். எதிரே ஓர் ஓரமாகத் தன் இரு கரங்களையும் கட்டிக் கொண்டு நின்றிருந்தான் வெற்றிவேல். அவன் முன்னால் கிடந்தது அந்த மூட்டை.

''இதுதானே உன் மூட்டை! இந்தத் திருடனை நீ பார்த்திருக்கிறாயா..?'' என வினவினார் பெரிய பாண்டியர்.

''ஆம்; இது என் மூட்டைதான். ஆனால், இவன் திருடனல்ல'' என்ற வேலப்பன், நடந்தவற்றை அப்படியே விவரித்தான்.

''சரி, இவன் வெறும் திருடனல்ல; துரோகி என்பது உன் வார்த்தைகளால் நிரூபணமாகிவிட்டது. என்ன தண்டனை அளிக்கலாம். அதையும் நீயே சொல்...?'' என்றான் குலசேகரபாண்டியர்.

''சத்திரத்தில் இவன் என் பொற்காசுகளைத் திருடினான், அதற்காக நான் இவனைக் கொன்று விட்டேன் என இந்த வழக்கை மாற்றுங்கள். எனக்கும் சிறைத் தண்டனை விதித்து விடுங்கள் மன்னா. இவன் தங்களையும், இளையவரையும் கோழை என்றான். இளைய பாண்டியர்

## சோழ நாட்டை ஒரு நாள் இந்த சுந்தரபாண்டியன் முழு வெற்றி கொள்வான் என்கிற உன் நம்பிக்கை வாக்குதான் என் இலட்சிய வேதம்.



அண்ணனுக்கு அடங்கியவர்தான். ஆனால், அநீதிக்கு அடங்கியவர் அல்லர். காலச் சக்கரம் சுழலும். சுந்தர பாண்டியர் ஒரு நாள் கடலாகப் பொங்கி எழுவார். அந்தச் சூறாவளியில், சோழ நாடு சின்னா பின்னமாகும். என் வாக்கு பொய்த்தால், நான் சிறையிலேயே மாய்ந்து போவேன்.'' உணர்ச்சிவசமாய்ப் பேசினான் வேலப்பன்.

''முளசை வேலப்பா, உன் கையால், சாவதற்கு நான் புண்ணியம் செய்திருக்க வேண்டுமடா... ஆனால், உன் சூளுரையை நிறைவேற்றவாவது நான் உயிர்வாழ விரும்புகிறேன்...''

என்ன இது...? குற்றம் சாற்றப் பெற்று நின்றவன், தலைப்பாகை, தாடி க்ளைந்து, பட்டு உத்தரியம் ஒன்றை மேலே போர்த்தியவாறு ஓடோடி வந்து வேலப்பனை மார்புறத் தழுவுகிறான்!

''யார் நீ... நீங்கள்...?''

''நான்தானடா நீ தேடி வந்த இளைய பாண்டியன். என்னை நண்பனாக ஆக்கிக் காட்டுவதாகத்தானே நீ சபதம் கூறி வந்தாய்? இப்போது நான் கூறுகிறேன், கூறுவது என்ன... சாசனம் ஒன்றே எழுதித் தருகிறேன். 'சோழநாட்டை ஒரு நாள் இந்த சுந்தரபாண்டியன் முழு வெற்றி கொள்வான்' என்கிற உன் நம்பிக்கை வாக்குதான் என் இலட்சிய வேதம். நீ என் குரு, ஞான ஆசான். அதனால் நான் உனக்கு நண்பனல்ல; அடிமை. 'வேலப்ப வள்ளலின் அன்புக்கு இந்த சுந்தர பாண்டியன் என்றும் அடிமை' என்பதே அந்தச் சாசன வாசகம்..''

அப்போதே எழுதப்பட்ட அந்த சாசன ஓலையை, குலசேகர பாண்டியர் கண்கள் பனிக்க வேலப்பனிடம் வழங்கினார்.

**ந**டந்த சம்பவத்தை நினைவுகூர்ந்த வேலப்பன், ஊராரை அழைத்துச் சென்று, ஊர் எல்லையில் நிற்போரைக் கண்டான்.

அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவன் ஓர் ஓலை நறுக்கை வேலப்பனிடம் கொடுத்தான். அது சுந்தரபாண்டியனின் ஓலை!

'சோழர் படையெடுப்புகளால், பாண்டிய தேசம் கடும் பஞ்ச நிலையை அடைந்துள்ளது. திண்தோள் மறவர்களைத் திரட்டுவது எளிது எனினும், படைகளாக அணிவகுத்துக் காப்பது எளிதாக இல்லை. சில ஆயிரம் வீரர்களைத் திரட்டி, ஆங்காங்கே நண்பர்கள் வசம் ஒப்படைத்து, மறைவாகப் பாதுகாக்கத் திட்டமிட்டுள்ளேன். நீயும் இதில் பங்கு கொள்ள வேண்டும். நீ வெறும் வேளாளன் மட்டுமல்ல; வீர வல்லபங்கள் நிறைந்தவன். மதுரை வந்திருந்தபோது, நீ என் அடங்காத புரவி ஒன்றை அடக்கி, உன் வீரத்தையுமே நிரூபித்தாய். உன் வீர உரைதான் என் இரத்த நாளங்களைச் சூடேற்றி, எழுச்சி கொள்ள வைத்துள்ளது. இந்த வேளையில், பாண்டிய வீரர்களைப் பாதுகாத்து உதவுமாறு வேண்டுகிறேன், உன் அன்பின் அடிமை சுந்தர பாண்டியன்.'

தன்னுடைய எண்ணம் கைகூடுவதாக எண்ணி, வேலப்பனின் மனம் பூரித்தது. அந்தப் பூரிப்பு அர்த்தமுள்ளது என்பதை அடுத்து நடந்த சுந்தரபாண்டியனின் போரும், பாண்டியப் பேரரசின் எழுச்சியும் நிரூபித்தன. இதே முளசை வேலப்பன், பாண்டிய ராஜப்பிரதிநிதியாக கொங்கு மண்டலத்தில் கோலோச்சினான் என்பதும் வரலாறு நமக்குச் சொல்லும் செய்தி. ●

## பாலிடிக்ஸ் போட்டி -

கீழ்க்கண்ட பெயர்களையும் ஃபடா ஃபட் பட்டங்களையும் பொருத்துங்கள். எஞ்சியுள்ள பெயருக்கு நீங்களே ஒரு பட்ட சூட்டி, இப்பக்கத்தைக் கத்திரித்து அனுப்புங்கள். பட்டங்களைச் சரியாகப் பொருத்தும் பத்து பேருக்கு, குலுக்கல் முறையில் தல ரூ.100/- பரிசு. மிஞ்சும் தலைவரைக் கெஞ்ச வைக்கும் தலைசிறந்த பட்டம் சூட்டுபவருக்கு ரூ.1000/- பரிசு கடைசி தேதி: 24.4.2009. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.



1. லல்லு பிரசாத் யாதவ்
2. வருண் காந்தி
3. மாயாவதி
4. மு.க.அழகிரி
5. ஜெயலலிதா
6. நவீன் பட்னாயக்
7. நரேந்திர மோடி

அ. மில்லெனிய அபிமன்யு
ஆ. காவி துறந்தான்
இ. (அறிக்கை) அம்புச் சகோதரி
ஈ. மதர் சுபீரியர்
உ. குஜராத் கொண்டான்
ஊ. ரோட் ரோலர் ராம்போ

# ஃபடா ஃபட் பட்டங்கள்!

உங்கள் விடைகள் :

1. 2. 3. 4.

5. 6. 7.

சூட்டும் பட்டம்:

*உறை மீது பாலிடிக்ஸ் போட்டி - 1 என்று மறவாமல் குறிப்பிடவும்.*

என் பெயர் : ..................................................

விலாசம் : ..................................................

..................................................

..................................................

கல்கியில் விரும்பி வாசிப்பது :

..................................................

# ஜகதீஷ் டைட்லர் நிரபராதியாமே?



* கால் நூற்றாண்டு காயம்!

● எஸ்.சாந்தி, காட்பாடி

**? அரசியல் நாகரிகம் என்பதற்கு இன்றைய பொருள் என்ன?**

! அப்படி ஒன்றையும் காணோம்! அரசியல் அநாகரிகம் என்பதற்கு வேண்டுமானால் நிறைய உதாரணங்கள் தரலாம். வருண் காந்தி பேச்சு - அதைத் தொடர்ந்த லாலுவின் பேச்சு. மேனகா பேச்சு - அவர் பேச்சைத் தொடர்ந்து மாயாவதி பேசியவை…

● இரா.சக்கரபாணி, மதுரை

**? உலகிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு விலை இருக்கிறது. வோட்டுகளை மட்டும் வாக்காளர்கள் இலவசமாக அளிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது தர்மமா?**

! எல்லா பொருட்களுக்கும் விலை உண்டு என்று கருதுவது பெரும் தவறு. நேர்மை, கற்பு, நல்லொழுக்கம், தார்மிகப் பண்பு போன்றவை விலை கொடுத்து வாங்க முடியாதவை. இவை நம் உணர்வோடு கலந்த உறுதிப்பாடுகள். வாக்களிப்பது என்பது இந்த ரகம்தான். அதற்கு விலை பேசப்பட்டால் அது வலுவிழந்து விடும். ஜனநாயகத்தின் அஸ்திவாரம் ஆட்டம் கண்டு விடும்.

● லெ.நா.சிவகுமார், சென்னை-33

**? ஆந்திராவில் சிரஞ்சீவிக்குக் கிடைக்கும் உற்சாக வரவேற்பு தமிழ்நாட்டில் விஜயகாந்த்துக்குக் கிடைப்பதாகத் தெரியவில்லையே?**

! அவசரப்படாதீங்க! பிரஜா ராஜ்யம் பிளவுபட்டு, பேஜார் ராஜ்யம் ஆகும் அறிகுறிகள் ஆரம்பித்துவிட்டன.

● பி.மீனா கணபதி, திருநெல்வேலி

**? வருண் காந்தி, ராகுல் காந்தி பேச்சு - ஒப்பிடுக. புடம் போடாததும் புடம் போட்டதுமான பேச்சுக்களா?**

! வருண் காந்தியின் மத துவேஷ பேச்சு ஒருபுறம் இருக்க, ராகுல் காந்தி வேட்பு மனு தாக்கலில் தம் கல்வி குறித்து தவறான தகவல்களை அளித்துள்ளார் என ஆதார பூர்வமாக செய்தி வெளியாகியுள்ளதே! எதைக் கொண்டு இவர்களைத் தங்கத்தோடு ஒப்பிடுவது?!

● பி.ஜெயபிரகாஷ், சர்கார்பதி

**? மகாபாரத அபிமன்யு போல அனைத்துப் பிரச்னைகளிலிருந்தும் எனது மகன் வருண் மீண்டு வருவான் என்று மேனகா காந்தி கூறியுள்ளது குறித்து?**

! அபிமன்யு பத்மவியூகத்துக்குள்ளேயே மரித்துப் போனான் என்பதுதான் கதை. வருண், கீதையைச் சரியாகப் படிக்கவில்லை; மேனகா காந்தி பாரதத்தைச்

# நீங்கள் கேட்டவை-தராசு



* பேஜுர் ராஜ்யம்!

எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை, அதை அவர் புறக்கணிக்கவும் இல்லை என்பது.

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? பணம், நிம்மதி, புகழ் - இதில் மனிதனுக்கு எது தேவை?

! புகழுக்கு ஏங்காத நிம்மதி; அந்த நிம்மதியைக் காத்துக் கொள்ளும் அளவுக்குப் பணம்!

● பி.என்.ஜெய்குமார், திருவாரூர் ❐

? ''49ஓ சட்டப்பிரிவின்படி வாக்கினைப் பதிவு செய்து, வேட்பாளர்களுக்கு எதிராக வோட்டளித்து, நம் நிராகரிப்பைக் காட்ட வேண்டும்'' என்கிறாரே கோபக்காரப் பத்திரிகையாளர் ஞாநி?

! எல்லா வேட்பாளர்களையும் நிராகரிக்கும்



* உயிரை விடாமூச்சு!

சரியாகப் படிக்கவில்லை!

● ஆர்.ராமசுப்ரமணியன், திருவாரூர்

? ஆன்மிகத்தில் நம்பிக்கையில்லாத முதல்வருக்கு, திருக்கடையூரில் ஆயுஷ் ஹோமம் நடத்தப்பட்டுள்ளது பற்றி?

! அவர் அதில் கலந்து கொள்ளவில்லை என்பது



* போட்டி அநாகரிகம்

உரிமை மக்களுக்கு உண்டு என்பதும் அதைச் சுலபமாக வெளியிட, வாக்களிக்கும் இயந்திரத்திலேயே வசதி செய்து தரப்பட வேண்டும் என்பதும் நியாயமான, ஏற்கப்பட வேண்டிய கருத்துக்கள்தான். ஆனால், இது நெகடிவ் சிந்தனை. நமது ஜனநாயகம் மேம்பட பாஸிடிவ் சிந்தனையே பெரிதும் உதவும். இப்படிச் சொன்னதற்காக ஞானியின் கோபத்துக்கு நான் ஆளாக நேர்ந்தாலும் சரி!

● எஸ்.சக்தி, இராஜபாளையம் ★

? சீக்கியர்களுக்கு எதிரான கலவர வழக்கில், இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, 'ஜகதீஷ் டைட்லர் நிரபராதி' என்று சி.பி.ஐ. கூறியிருக்கிறதே - இது பற்றி தராசின் கருத்து...?

! இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு உணர்ச்சிகளின் கொந்தளிப்பு அடங்கிப் போயிருக்கும் என்று சி.பி.ஐ.யை ஆட்டுவிக்கும் கட்சித் தலைமை கருதியிருக்கலாம். ஆனால், அது தப்புக் கணக்கு என்பதை உள்துறை அமைச்சர் மீது வீசப்பட்ட காலணி உணர்த்துகிறது.



★ திரித்த தகவல்!

● எஸ்.ருக்மிணி, சேலம்

? ம.தி.மு.க.வில் மறுமலர்ச்சி ஏற்படும் வாய்ப்பு உள்ளதா?

! பெயரளவில் ஏற்பட்டு உள்ளதே!

● ஆர்.ஆர்.தமன், சென்னை - 106

? அத்தியாவசியத் தேவைகளுக்காகவே போராடி, அல்லல்பட்டு மடிவதை விட, நிரந்தர நித்திரை சிறந்ததுதானே? தற்கொலைக்குத் தடை விதிப்பது நியாயமா?

! தற்கொலையின் மூலம் தன்னம்பிக்கையைக் கொலை செய்து, மக்களிடம் அவநம்பிக்கை பரப்புவதால், தற்கொலைக்குத் தடையும் அம்முயற்சிக்குத் தண்டனையும் ரொம்ப நியாயமே.

● எம்.செல்லையா, சாத்தூர்

? உலகத் தமிழர் பாதுகாப்பை ஜெயலலிதா உயிர் மூச்சாகக் கொண்டுள்ளார் என்கிறாரே நல்லகண்ணு?

! ஜெ. மட்டுமென்ன; தமிழகத் தலைவர்கள் எல்லோருக்குமே அதுதான் உயிர் மூச்சு. (உயிரை விடாத மூச்சு!) பாதுகாப்புப் பகுதியில் புலிகளின் பிணைக் கைதிகளாக உள்ள தமிழர்கள் மீட்கப்பட்டு விட்டால், அது இவர்களுடைய பெரு மூச்சாக மாறி வெற்றி கொண்டாடும்.



★ படிக்காத பாரதம்!

● வசந்தா சித்திரவேலு, கருப்பம்புலம்

? "எனக்கு எந்தப் பதவியும் வேண்டாம் என்று கூறிய ராமதாஸின் வாரிசு நான். தொண்டர்கள்தான் வற்புறுத்தி எனக்குப் பதவி வாங்கித்

△ ரூ.100/- சிறப்புப் பரிசு பெறுபவர் :
ந.சந்திரமௌலி, ஊத்துக்குளி

தந்தனர்'' என்கிறாரே முன்னாள் அமைச்சர் அன்புமணி?

! ஜனநாயகத்தில் எந்த அரசியல் பதவியும் மக்களால் அளிக்கப்படுவதுதான், அன்புமணி ஸார்! அந்தப் பதவியில் இருந்தபோது சில பிரச்னைகளைத் தேவையில்லாமல் நீங்க உருவாக்கினாலும், புகை பிடித்தல் போன்ற தீமைகளை எதிர்த்து இயக்கம் நடத்தி, சட்டமும் கொண்டாந்தீங்க; தேங்க்ஸ்.

● ஆர்.மாதவராமன்,
கிருஷ்ணகிரி

? ''மதவாதத்தை ஒழித்தால்தான் பயங்கரவாதத்தை ஒழிக்க முடியும்'' என்கிறாரே சிதம்பரம்?

! ரொம்ப சரி; ஆனால் அதைச் செய்வதற்குப் பதிலாக, எல்லா கட்சிகளும் சுய நலத்துக்காக வெவ்வேறு விதங்களில் மதவாதத்தை வளர்க்கின்றனவே!

● ப.சுகுமார், தூத்துக்குடி

? ஜனநாயகக் கடமை என்பது வாக்களிப்பது மட்டுமா?

! இல்லை; தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் தங்கள் கடமையைச் சரியாகச் செய்யாவிட்டால் தட்டிக்கேட்பது; அவர்கள் செய்யக் கூடிய தவறு / அநீதிகளுக்குத் துணை போகாமல் இருப்பது; தனி நபர் நலனுக்கு மேலாகப் பொதுநலம் போற்றுவது - எல்லாமும்தான்!

● ஆர்.பி.ஜெயச்சந்திரன்,
பூணாம்பாளையம்

* புறக்கணிக்காத ஹோமம்!

* நெகடிவ் சிந்தனை

? எத்தனை தேர்தல் வந்தாலும் எத்தனை அரசியல்வாதிகள் ஜெயித்தாலும் மக்களின் 'தாக'ப் பிரச்னைகளும் சாலைப் பிரச்னைகளும் தீர்க்கப்படவில்லையே?

! தாகப் பிரச்னையை டாஸ்மாக் கடைகளும் சாலைப் பிரச்னையை ஆங்காங்கே அமைக்கப்படும் மேம்பாலங்களும் தீர்த்து வைத்துவிடும் என்று அரசியல்வாதிகள் நம்புவதுதான் காரணம்.

● ந.சந்திரமௌலி,
ஊத்துக்குளி △

? 'எங்கள் பாரத தேசம்! நான் இந்தியன்' போன்ற பெருமித உணர்வு நம்மிடையே மேலும் உருவாக எத்தகைய நடைமுறை தேவை?

! கல்விச் சீர்திருத்தத்துக்கு முதலிடம் தந்து, அதன் மூலம்தான் இதைச் சாதிக்க முடியும். 'அனைவருக்கும் கல்வி' என்பது, 'அனைவருக்கும் தேச பக்தியூட்டுகின்ற, வாழ்க்கைக்கும் பயனுள்ள கல்வி' என்பதாக மாற வேண்டும். இன்று தொடங்கினால், இன்னும் இருபது வருஷங்களில் இச்சாதனை நிறைவு பெறும்.

● வி.ஜி.சத்தியநாராயணன்,
நங்கநல்லூர்

? தமிழகத்தில் காங்கிரஸின் எதிர்காலம்...?

! கைகட்டி நிற்கும்; ஒரு கை டில்லி தலைமைக்கும் மற்றொன்று பிரதேச மாநிலக் கட்சிக்குமாகப் பணிவுடன்.

●

□ ரூ.150/-பரிசு பெறுபவர் :
பி.என்.ஜெய்குமார், திருவாரூர்

★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :
எம்.சக்தி, ராஜபாளையம்

நம் வாழ்வின் பக்கங்களில் கல்லூரிகளுக்கு மிக முக்கியப் பங்கு உண்டு. கடந்து போன சில கவித்துவமான நினைவுகளை அது தனக்குள் ஒளித்து வைத்துக் கொண்டிருப்பதுதான் அதற்குக் காரணம். சுமார் 1985க்குப் பிறகு படித்த இருபது ஆண்டு கால மாணவர்களில் சிலர் ஒரு குழுவை அமைத்து தம் கல்லூரியில் மறுபடி அனைத்து பழைய மாணவர்களையும், ஆசிரியர்களையும் சந்திக்க முடிவெடுத்து சமீபத்தில் 'பழைய மாணவர்களின் புதுவரவு 09' என விழாவாகக் கொண்டாடினர். எழும்பூர் கவின் கலைக் கல்லூரியில். அந்நிகழ்விலிருந்து...

**இந்தப் பூக்கள் நிச்சயம் கண்ணீர் சிந்தியிருக்கும், நீங்கள் இக் கல்லூரியை விட்டுப் போகும்போது.**

சந்திப்பு





பூக்களும், இலைகளும் உதிரத் தொடங்கும் ஒரு ஞாயிறு மாலை வேளையில் கல்லூரியின் முதல்வர், ஓவியர் 'சந்ரு' அவர்களின் உரையோடு இறுதி நிகழ்வுகள் தொடங்கின. அவர் பேசும்போது 'இந்தப் பூக்கள் நிச்சயம் கண்ணீர் சிந்தியிருக்கும், நீங்கள் இக்கல்லூரியை விட்டுப் போகும்போது. இப் பூக்களுக்கும், மரங்களுக்கும் தண்ணீர் ஊற்றி வளர்த்த ஏனைய பணியாளர்களையும் நீங்கள் கௌரவிக்க வேண்டும்' என்றார்.

பழைய மாணவர்களில் பெரும்பாலானோர் தம் மனைவி, குழந்தைகளோடு வந்திருந்தனர்.

குழந்தைகள் மரங்களைச் சுற்றி விளையாடியபோது பெற்றோர்களும் ஓடிப்பிடித்து அவர்களோடு விளையாடியது, இழந்த வாழ்க்கையை அவர்கள் மீட்டெடுத்து விட்டது போல் தோன்றியது.

சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட கலை பண்பாட்டுத் துறையின் அரசு செயலர் வெ. இறையன்பு

(இ.ஆ.ப) பழைய ஆசிரியர்களுக்கும், பணியாளர்களுக்கும் கேடயங்கள் வழங்கினார். அதில் சிற்பி தட்சிணாமூர்த்தி, ஓவியர் ராமன் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்க ஒன்று.

வயதான முதியவர் ஒருவர் தத்தித் தத்தி மேடையின் அருகே செல்ல முடியாமல் தவிக்க... அவருக்கு உதவிய இளைஞரை அவர் கட்டிக் கொண்டு உச்சிமுகர்ந்து முத்தம் கொடுத்த காட்சியைப் பார்த்த நமக்கும் கண்கலங்கியது. அந்தப் பெரியவர் பெயர் மாரிக்கன். கல்லூரியின் பழைய அட்டெண்டராம்.

ஜே.கே.விடம் பேசியதில், ''இந்த இரண்டு நாள் சந்திப்பின் முக்கிய நோக்கமே நம் கல்லூரியின் புதிய மாணவர்களுக்கு, எங்களின் வேலைகள் பற்றியும் ஓவியத் துறையிலும், ஏனைய துறைகளிலும் ஏற்பட்டுள்ள வளர்ச்சி பற்றியும் அவர்களோடு கலந்துரையாடி அவர்களின் பயத்தைப் போக்கி வழிகாட்டுவதுதான். ஏனெனில் நாங்கள் கல்லூரியை விட்டு வெளியேறும்போது வழிகாட்டுவதற்கு ஆட்கள் இல்லாததால் பெரும் சிரமத்துக்கு உள்ளானோம். இனி அது இவர்களுக்கு ஏற்படாது'' என்றார். மேலும், ''இரண்டு நாட்களும் குழந்தைகளுக்கான ஓவியப் போட்டி மற்றும் விளையாட்டுப் போட்டி, முன்னாள் மாணவர்களின் கலைப் படைப்புகள், துறை அனுபவங்களைப்

# ஞாபகம் வருதே... ஞாபகம் வருதே...





படைப்பாக்குதல் போன்றவற்றையும் நடத்தினோம்'' என்று குறிப்பிட்டார்.

இரவு ஒன்பது மணிக்கு மேல் எல்லோரும் பிரிய மனமின்றி, கண்ணீருடன் கிளம்பிச் சென்றனர்... கல்லூரியின் கடைசி நாள் ஞாபகம் மனத்தில் வந்து போனது. 'நீ பாதி.. நான் பாதி கண்ணே' - என அரங்கத்தில் இறுதிப் பாடல் ஒலித்துக் கொண்டிருக்கும்போதே நாமும் வெளியேறினோம். கல்லூரியை ஒட்டிய ரயில் பாதையின் 'தடக்.. தடக்' சப்தம் காதுகளுக்குள் கேட்டுக் கொண்டே இருந்தது.

**ப**ழைய மாணவர்கள் இசை, மிமிக்ரி செய்து எல்லோரையும் மகிழ வைத்தனர்... குறிப்பாக முதல்வர் 'சந்ரு' போல் கையைக் கட்டிக் கொண்டு, நடந்து பேசியதும்... 'அட்றா... அட்றா.. நாக்கு மூக்க... நாக்க மூக்க...' பாடலைப் பழம்பெரும் நடிகர் 'ராகவன்' குரலில் பாடி அசத்தியதும் அரங்கத்தை கைதட்டலால் அதிர வைத்தன.

**ப**ழைய மாணவர்களில் ஒருவரான

– **கிராபியென் ப்ளாக்**

# காலம்

இரண்டாய் வகுந்துகிடந்த
ஒற்றையடிப் பாதையில்
வளைந்தும் நெளிந்தும்
புணர்ச்சிக்குப் பிறகான
மயக்கத்திலிருக்கும்
வனப்பாம்பாய்
நீண்டு கிடந்த காலம்
வெம்மையைக் குடித்து
வெறிபிடித்திருந்தது

ஊடறுந்த
என் கால்களின் வயிற்றில்
உப்புப்படலங்களைப்
பிரசவிக்கச் செய்த
அதன் முகத்தில்
சாதித்த செருக்கு

குளத்தின் அலைகளைக்
கட்டிக்கொண்டு
யாத்திரை துவங்கிய காலம்
எதிர்ப்பட்ட கிழவியிடம்
குளுமையைத் திணித்ததில்
தாய்மையின் வாசம்
ஆட்டிடையனின்
வளைந்த கொம்பில்
கண்கிறங்கி
மணிச் சத்தத்தில்
தரித்த கனவை
நரிகள் கிழித்துப் புசிக்க
அலறியது.

கணவனோடு சிணுங்கிக்கொண்டு
தனித்திருந்தவளிடம்
நாணம் பூசி அது
பருவத்துக்கு வந்த
அந்தக் கணம் முதல்தான்
தென்றலின் சிருங்காரத் தொந்தரவு

புள்ளினங்கள் அலைந்துருகும்
அந்துவானத்தில்
மையப் மைய
ஓர் ஆக்கிரமிப்பாளனைப் போல்
ஊடுருவும் காலம் குறித்து
எவ்விதப் பிரக்ஞையுமற்று
ஊரும் நத்தையின் முதுகில்
மனசை ஏற்றி அனுப்பிவிட்டு
நரைக்கத் துவங்கிக்கொண்டிருந்தேன்
நான்.

கதிர்பாரதி



# மூச்சுத்திணறும் ஜனநாயகம்!

— கே.கே.வேணுகோபால்

பணபலம் கொண்டவர்களும், கிரிமினல்களும் தேர்தலைத் தங்களுக்குச் சாதகமாக வளைத்துக் கொள்ளும்போது ஜனநாயகம் மூச்சுத் திணறுகிறது. இதிலிருந்து விடுவித்துக் கொள்வதெப்படி? சென்னையில் சமீபத்தில் ராஜாஜி நினைவு சொற்பொழிவு ஆற்றிய பிரபல வழக்கறிஞர் கே.கே.வேணுகோபால் வழிகளைச் சொல்கிறார்...

உலகின் பெரிய ஜனநாயக நாடான இந்தியா பல்வேறு தேர்தல் சீர்திருத்தங்களை அமுல்படுத்தி இருக்கிறது. இருந்தும் பணபலமும் (Money power) குண்டாயிஸமும் (Muscle Power) நமது தேர்தல் முறையை சுவீகரம் செய்திருக்கின்றன. பதினான்காவது பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் 93 பேர் மீது, கொலை, பாலியல் பலாத்காரம், கலவரம் தொடர்பான வழக்குகள் இருந்தன. இந்த நிலையை நீடிக்க அனுமதித்தால் நாளை மொத்த பாராளுமன்றமும் கிரிமினல்களின் ஆளுகைக்குள் வந்து விடும்.

நமது தேர்தல் முறையில் உள்ள ஓட்டைகளை அடைக்க வேண்டும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக, சீர்திருத்தம் குறித்த தேர்தல் கமிஷன் மற்றும் சட்டக் கமிஷனின் பரிந்துரைகள் அரசு கோப்புகளில் உறங்கிக் கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட சூழலில் உச்சநீதிமன்றத்தின் சில தீர்ப்புகள்தான் தேர்தல் நடைமுறையில் ஜனநாயகத்தை மலரச் செய்யும் முயற்சிகள்.

மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் பிரிவு எட்டின்படி இரண்டு வருடங்களுக்கு மேல் தண்டனை பெற்றவர்கள் தேர்தலில் நிற்க முடியாது. ஆனால் இத்தகைய சீர்திருத்தங்கள்கூட அரசியல் கட்சிகளுக்குப் பிடிக்கவில்லை என்பது கசப்பான உண்மை. "உச்சநீதி மன்றத்துக்கு இந்த வகையில்

தீர்ப்பு சொல்ல அதிகாரம் கிடையாது. பாராளுமன்றம்தான் தீர்மானிக்க வேண்டும்'' என்று குரல்கொடுத்தார்கள் அரசியல் தலைவர்கள். ஆனால் மக்கள் பிரதிநிதித்துவ சட்டம் 142ம் பிரிவின்படி காலத்துக்கு ஏற்றபடி, அவ சியத்துக்கேற்ப விடுபட்ட இடங்களில் உச்சநீதிமன்றம்


✱ கே.கே.வேணுகோபால்

**நிறுவனங்கள் கொடுக்கும் பணபலத்தால்தான் தில்லுமுல்லுகள், விதி மீறல்கள் நடக்கின்றன**

புதிய வழிகாட்டுதல்களைச் சொல்ல உரிமை உண்டு.

பதவியில் இருக்கும் ஒரு உறுப்பினருக்கு, நிலுவையில் இருக்கும் ஒரு வழக்கில் இரண்டு வருடத்துக்கு மேல் தண்டனை கிடைத்தாலும், மேல்முறையீடு செய்வதற்கு வெளியே வரும் அவர், பதவியிழப்பதில்லை! அவர்களைத் 'தகுதியிழப்பு' செய்யும்படியான உரிய சட்டத் திருத்தங்கள் தேவை. கிரிமினல்களின் ஆதிக்கத்தை ஒழிக்க மற்றொரு வழி அரசியல்வாதிகள் மீது நிலுவையில் இருக்கும் வழக்குகளை ஒரு காலவரம்புக்குள் விரைவாக முடிப்பது. தேர்தல் அறிவிப்புக்கு ஆறு மாதம் முன்பே முடித்துவிட்டால் அரசியல் கட்சிகள் 'கறை' படிந்தவர்களைத் தவிர்க்க வேண்டிய கட்டாயம் ஏற்படும்.

1985-ல் திருத்தப்பட்ட சட்டத்தின்படி, லாபத்தில் ஐந்து சதவிகிதத்தை, கார்ப்பரேட் குழுமங்கள், நிறுவனங்கள் வெளிப்படையாகவே அரசியல் கட்சிகளுக்கு நிதி அளிக்க முடியும். ஆனால் நிறுவனங்கள் டெண்டர், காண்ட்ராக்ட் என்று ஆதாயங்கள் இல்லாமல் தேர்தல் நிதியைத் அள்ளிக் கொடுத்துவிடுமா? இப்படி நிறுவனங்கள் கொடுக்கும் பணபலத்தால்தான் தில்லுமுல்லுகள், விதி மீறல்கள் நடக்கின்றன.

வேட்பாளர்களுக்கு அரசே தேர்தல் செலவைக் கொடுத்துவிட வேண்டும். இதற்குக் கூட அரசுப் பணத்தைச் செலவழிக்க வேண்டாம். நிறுவனங்களிடமிருந்து நன்கொடை பெற்று ஒரு பொது நிதியை உருவாக்கி, அதிலிருந்தே கொடுக்கலாம்.

வாக்குப் பதிவு இயந்திரத்தில், ''யாருக்கும் வோட்டுப் போட விரும்பவில்லை'' என்ற கருத்தை வெளிப்படுத்த தனி பட்டன் வைக்க வேண்டும். இப்படி யாருக்கும் வோட்டுப் போட விரும்பாதவர்களின் எண்ணிக்கை வெற்றி பெறுபவரின் வாக்கு சதவிகித்தை விட அதிகம் இருந்தால், அந்தத் தொகுதியில் அவர் வெற்றி பெற்றது செல்லாது என்று அறிவித்து விட வேண்டும்.





● வி.ஜி.சத்திய நாராயணன், நங்கநல்லூர்

**உண்மையிலேயே 'பிஸி'யாக இருப்பவர்களையும், 'பிஸி'யாக இருப்பது போல காட்டிக் கொள்பவர்களையும் எப்படி கண்டு கொள்வது..?**

உண்மையிலேயே 'பிஸி'யாக இருப்பவர்கள் காட்டிக்கொள்ள மாட்டார்கள். காட்டிக் கொள்பவர்கள், காட்டிக்கொள்வதில் 'பிஸி'யாக இருப்பார்கள்.

● தாமல் கண்ணன், பெங்களூர்.

**அப்பா பிள்ளை அதிகம் பேசிக் கொள்வதில்லை. ஆனால் தாத்தா பேரனுக்கு இடையே பேச்சுறவு அதிகமாக உள்ளதே... ஏன்...?**

பொக்கையின் பேச்சு பொக்கைக்குத்தான் புரியும்.

● அ.யாழினி பர்வதம், சென்னை

**பொன்னியின் செல்வனை சினிமாவாக எடுத்து அதில் உங்களை நடிக்க அழைத்தால், எந்தப் பாத்திரத்தை விரும்பிக் கேட்பீர்கள்...?**

எனக்கு மிகவும் பிடித்த பாத்திரத்தை, எனக்குக் கொடுக்க மாட்டார்கள். அது 'நந்தினி' கதாபாத்திரம். என் 'பாத்திரம்' அறிந்து அவர்கள் 'பிச்சையிடப் போவது' ஆழ்வார்க்கடியான் பாத்திரம்தான்.

● காயத்ரி, கும்பகோணம்

**ரோஜாவில் நெகடிவ்வாக ஏன் முள்ளை வைத்தான் இறைவன்...?**

சட்டையில் குத்திக் கொள்ள. பாஸிடிவ்வாக யோசித்துப் பாருங்கள்!

● மஞ்சுளா, சென்னை

**இந்த எலெக்‌ஷனில் நீங்க வேட்பாளரா வாக்காளரா...?**

ஓட்டுச்சாவடியை நோக்கிச் செல்லும் Walkகாளர்!

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி

**முட்டாள்கள் தினம் கொண்டாடும் நாம் ஏன் அறிவாளிகள் தினம் கொண்டாடுவதில்லை...?**

முட்டாள்கள் தினம், அறிவாளிகள் தினம் இரண்டும் ஒண்ணுதான். ஏப்ரல் ஒண்ணுதான். இப்போதெல்லாம் முட்டாள் ஆக்குபவன்தான் அறிவாளி என்றாகிவிட்டது.

● டி.முருகேசன், திருவாரூர்.

**பாய் ஃப்ரண்டை நம்பலாமா? கேர்ள் ஃப்ரண்டை நம்பலாமா...?**

Friend என்பவன் கடைசி வரை மாறாமல் கைகொடுக்கும் Trend. Boyயோ, Girlலோ நம் பலமாக இருப்பவரை நம்பலாம்.

# கேர்ள் ஃப்ரண்டை நம்பலாமா?

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**'நிர்வாணம்' புனிதமா...?**

புத்த நிர்வாணம் புனிதம். மத்த நிர்வாணம் தற்காலிகக் கிளர்ச்சியைத் தோற்றுவித்து தடாலென்று அணைந்து

போகும் புஸ்வாணம்.

● ரேவதிப்ரியன், ஈரோடு

**கி.மு., கி.பி.க்குப் பிறகு அடுத்த தலைமுறையை எப்படிக் குறிப்பிடு வார்கள்?**

அடக்கம் தடுக்கிறது. இருந்தாலும் சொல்றேன். அதே கி.மு., கி.பி.யில்தான் கிரேஸிக்கு முன், கிரேஸிக்குப் பின். ஹிஹிஹி...




● ஆர்.அஜிதா, கம்பம்.

**திருவள்ளுவர் திருக்குறளை இன்னும் கொஞ்சம் கூட்டியோ இல்லை குறைத்தோ எழுதியிருந்தால்...?**

வரிகளைக் கூட்டி எழுதியிருந்தால் விருத்தமாகி இருந்திருக்கும். எண்ணிக்கையைக் குறைத்து எழுதியிருந்தால் நமக்கு வருத்தமாகி இருந்திருக்கும். 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' சொன்னவராயிற்றே... அவருக்குத் தெரியாத அளவா?

● மு. மதிவாணன், அரூர்.

**தங்கள் வீட்டிலேயே ஏகப்பட்ட கஷ்டங்களை வைத்துக் கொண்டு, மற்றவர் வீட்டுக் கஷ்டங்களை டி.வி. சீரியலில் பார்த்துத் தேம்பி அழும் சில பெண்கள் பற்றி...?**

ஊரார் கஷ்டங்களைப் பார்த்து அழுது தொலைத்தால் தம் கஷ்டம் தானாய்த் தொலையும் என்ற மூட (இடியட்-பாக்ஸ்) நம்பிக்கை உள்ளவர்கள்.

● வி.திலகம், திருநெல்வேலி.

**ஹலோ கிரேஸி... நீங்கள் நாக்கைக் கடித்து விட்டால் யாரைக் கிள்ளுவீர்கள்...?**

இதை நான் 'கேள்விப்'பட்டதில்லை. பட்டதால் பதிலளிக்கிறேன். கிள்ளுக் கீரையை; கடிபட்ட நாக்குப் புண் ஆற மணத்தக்காளிக்கீரையைக் கிள்ளிப் பறித்து உண்பேன். ●



# ஜன்னோடு ஜன்னாக...

'கூல் லுக்ஸ்' இன்றைய யூத் மந்த்ரா! ஃபேஷனபிள் ஆடை மாத்திரமல்ல, டிரெண்டியான ஆக்ஸஸரீஸ் கண்டிப்பாக இருக்கணும் என நினைக்கிறார்கள். ஷேட்ஸ் (சன் கிளாஸ், கூலிங்கிளாஸ்) ஸ்டைலாக, வித்தியாசமாகப் போடணும், ரிச் லுக் வரணும்... என விரும்புகிறீர்களா...? இதோ சில டிப்ஸ்...

- லேபிள் பார்த்து வாங்கவும். UV பாதுகாப்பு இருக்கிறதா எனப் பரிசீலிக்கவும். சூரியக் கதிர்கள் கோடையில் மாத்திரமல்ல, மேகமூட்டமாக இருந்தாலும் கண்களுக்கு ஆபத்து என்கின்றனர். "Z80.3" என்ற ஸ்டிக்கர் உங்கள் சன் க்ளாஸில் இருக்கிறதென்றால் அது பாதுகாப்பானது என, அமெரிக்காவின் ANSI (அமெரிக்கன் நேஷனல் ஸ்டாண்டர்ட் இன்ஸ்டிட்யூட்) கூறுகின்றது. இவ்வகை கூலிங்கிளாஸ் 60 சதவிகிதத்திலிருந்து 98 சதவிகிதம் வரை அபாயக் கதிர்களிலிருந்து பாதுகாப்பளிக்கிறது.
- அடுத்ததாக ஸ்டைல் + கம்ஃபர்ட். தற்போதைய ஸ்டைல் பெரிய்ய சைஸ் கூலிங்கிளாஸ். 'அல்ட்ரா சைஸ்தான் ஃபேஷன்' என வீம்புக்கு வாங்கி விட்டு, பிறகு கூச்சப்பட்டு, போடாமல் இருப்பவர்களும் உண்டு. அதனால் உங்களுக்கு எது பிடித்திருக்கிறது, எது பொருந்துகிறது என தீர்மானம் செய்தபின் வாங்கவும்.
- முதலில் உங்கள் முகத்தின் ஷேப் என்னவென்று ஆராயவும். வட்டமா, சதுரமா, ஓவலா, நீளமா... என! அதற்குத் தகுந்தாற்போல் கூலிங்கிளாஸ் வாங்குவது ஈஸி அண்ட் பெஸ்ட் மெத்தட்!
- வட்ட வடிவமான முகமுள்ளவர்கள், ரவுண்ட் ஃப்ரேமுள்ள க்ளாஸ்களைத் தவிர்க்கவும். ஓவல் ஃப்ரேம் உங்களுக்குப் பொருத்தமாக இருக்கும்.
- நீள முகமா? சதுர ஃப்ரேம்தான் சரியான சாய்ஸ்! இது முக நீளத்தைக் குறைத்துக் காண்பிக்கும்.
- ஓவல் ஷேப் முகம் என்றால் லக்கி. எந்த வகை ஃப்ரேமும் உங்கள் முகத்துக்குப் பொருந்திவிடும். ஆனாலும் சற்றே சதுர வடிவ ஃப்ரேம் செலக்ட் பண்ணி அணிந்தால் எக்ஸ்ட்ரா ப்யூட்டிதான்!
- சதுரமான முகமுள்ளவர்கள் ஓவல் அல்லது ரவுண்ட் ஃப்ரேம் கூலிங்கிளாஸ்

அணியலாம். சூப்பர் கூல்!

● ஹார்ட் ஷேப் முகமுள்ளவர்கள், பரந்த நெற்றியும் குறுகிய முகவாய்க் கட்டையுமிருக்கும். இதை பாலன்ஸ் செய்யும் கலர் ஃப்ரேம் தேவை. டார்டாய்ஸ் ஷெல் அல்லது வேறு கலர்ஃபுல்லான ஃப்ரேம் போட்டால் போனஸாக வேறொருவரின் ஹார்ட்டும் உங்களுக்குக் கிட்டும்!

● தற்போதைய ட்ரெண்ட் 'ஏவியேட்டர் க்ளாஸ்'. பிக் இஸ் பெஸ்ட் என்கிறது யூத் ஸ்டேட்மெண்ட்.




● நல்ல தரமுள்ள, டிரெண்டி, ஃபேஷனபிள் கூலிங்கிளாஸ் வாங்கி அணியவும். பர்ஸனாலிட்டியைக் குபீரென உயர்த்தும் சக்தி இதற்கு உண்டு. தயவுசெய்து மலிவாக, பேரம் பேசி வாங்குகிறேன் என பிளாட்ஃபாரத்திலிருந்து வாங்காதீர்கள். ஆரோக்கியம், அழகு இரண்டுக்கும் டேஞ்சர்.

**இனி சில சுவையான கூலிங் கிளாஸ் தகவல்கள் :**

● அமெரிக்காவில் ஒவ்வொரு பதினான்கு நிமிடங்களிலும் யாரேனும் தன்னுடைய கூலிங்கிளாஸை உடைத்து, தொலைத்து அல்லது அதன் மீது உட்கார்ந்து விடுகிறார்களாம்.

● ஆண்களுக்கான கூலிங்கிளாஸ் ஒவ்வொரு 90 செகண்டிலும் விற்பனையாகிறதாம்.

● எல்விஸ் பிரெஸ்லி போட்ட சன்க்ளாஸ்தான் மிகவும் விலை உயர்ந்தது என இன்று வரை கருதப்படுகிறது. விலை 250,000 டாலர்!

● முதன்முதலாக 12-ம் நூற்றாண்டில் சீனாவில் கூலிங் கிளாஸ் அணியப்பட்டதாம்.

● பாடகர் எல்டன் ஜானிடம் தான் மிக அதிக அளவில் (ஆயிரத்துக்கும் அதிகமான) கூலிங் கிளாஸ்கள் இருக்கின்றனவாம்.

● ரோமபுரி மன்னன் நீரோ, தன் அரங்கத்தில் கேளிக்கை சண்டைகளைப் பார்த்து ரசித்திட கலர் ஜெம்களை உபயோகித்ததாகத் தகவல்!

**– லதா சேகர்**

# காலமும் கணக்கும்!

– த.கி.நீலகண்டன்

அண்டப் பெருவெளியைப் பார்த்துக் கொண்டே நிற்கையில் எவ்வளவு அதிசயப்படுவோமோ அவ்வளவு அதிசயமான விஷயம், நம் முன்னோர்களின் வானவியல் அறிவு. டெலஸ்கோப் போன்ற விஞ்ஞான சாதனங்கள் ஏதும் இல்லாமலேயே கோள்களின் போக்குவரத்தைக் கண்காணித்திருக்கிறார்கள்!

கல்பம், மன்வந்தரம், யுகம், வருடம், ருது, மாதம், பக்ஷம், நாள் என்பன காலத்தின் கூறுகள். நாள் என்பது திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்து அம்சங்களைக் கொண்டது. அதனால் நம்முடைய நாட்காட்டிக்கு (calender) பஞ்சாங்கம் (ஐந்து அங்கம்) என்று பெயர் வந்தது.



ஜனவரி முதல் தேதி நாம் காலண்டரை மாற்றுவது போல், தமிழ் வருஷப் பிறப்பான சித்திரை முதல் தேதி புது பஞ்சாங்கத்தைப் படிப்பது வழக்கம். அந்த வருஷம் எப்படியிருக்கும் என்று அறிந்து கொள்வது சுவாரஸ்யமான விஷயம் அல்லவா! இயற்கையின் வரவு செலவு கணக்கு (பட்ஜெட்) பஞ்சாங்கத்தில் சொல்லப்படுகிறதாம். மழை, தானியங்களின் உற்பத்தி, செல்வப்பெருக்கு ஆகியவை கணக்கிடப்பட்டு சொல்லப்படுகிறது. நம்புவதும் நம்பாததும் அவரவர் விருப்பம்!

ஒன்று, இரண்டு என்று வெறும் எண்ணிக்கையாக இல்லாமல் ஒவ்வொரு வருடமும் தனித்தன்மை கொண்டு விளங்குவதால் ஒவ்வொரு வருடத்துக்கும் காரணப் பெயர் உண்டு! பிரபவம் முதல் அக்ஷய வரை அறுபது வருடங்கள். இந்த வரிசை முடிந்ததும் மீண்டும் பிரபவம். அதனால்தான் அத்தனை வருஷங்களையும் ஒரு சுற்று பார்த்து விட்டவர்களுக்கு அறுபது வயதில் மணிவிழா, சஷ்டியப்தபூர்த்தி என்று கொண்டாடப்படுகிறது.

ஒவ்வொரு வருஷத்துக்கும் பலன் இன்னது என்று விளக்கும் வெண்பா இருக்கிறது. பஞ்சாங்கத்தின் முதல் பக்கத்திலேயே இது விளங்கும். வரும் விரோதி வருஷத்தின் வெண்பா, மழை அதிகமாகப் பொழியும் என்றும், காடு மேடெல்லாம் நல்ல விளைச்சல் காணும் என்றும், போரினால் உலகில் சேதம் உண்டாகும் என்றும், வியாதிகள் அதிகரிக்கும் என்றும் சொல்கிறது! காலம் நடத்தும் கோலத்தை நம்மால் தடுக்க முடியாது. எனினும் இந்த வருடம் நல்லதே நடக்கட்டும் என இறைவனைப் பிரார்த்திப்போம்.

